இயல் ஒன்று

# புதிய மானுடம் பற்றிய கருத்தாக்கங்கள்

1.0 முன்னுரை

1.1. மானுடம் என்னும் சொல்

1.1.1. புதிய மானுடம் - விளக்கம்

1.1.2. புதிய மானுடம் பற்றிய கோட்பாடுகள்

1.1.2.1. இந்தியப் பண்பாட்டில் மலர்ந்த கிருதயுகக் கோட்பாடு

1.1.2.2. விவிலியம் குறிப்பிடும் இறையரசுக் கோட்பாடு

1.1.2.3. இஸ்லாம் எதிர்நோக்கும் புத்துலகக் கோட்பாடு

1.1.2.4. மார்க்சியச் சிந்தனையாளர் சுட்டும் பொதுவுடைமைக் கோட்பாடு

1.1.2.5. காந்தியடிகள் கனவு கண்ட ராமராஜியக் கோட்பாடு

1.1.2.6. பெரியார் விரும்பிய சுயமரியாதை உலகக் கோட்பாடு

1.1.3. தொகுப்புரை

## இயல் ஒன்று

# புதிய மானுடம் பற்றிய கருத்தாக்கங்கள்

### 1.0. முன்னுரை

புதுக்கவிதையில் இடம்பெற்றுள்ள புதிய மானுடச் சிந்தனைகளை முழுமையாக ஆய்வு செய்ய வேண்டுமெனில், முதலில் புதிய மானுடம் என்றால் என்ன என்பது குறித்துத் தெளிவு பெறுதல் வேண்டும். புதிய மானுடத்தின் உருவாக்கத்திற்காக உலகில் இதுவரை நடைபெற்ற முயற்சிகள், அந்த முயற்சிகளை மேற்கொண்ட பெரியோர்களின் சிந்தனைகள், அந்தச் சிந்தனைகள் உருவான சூழ்நிலைகள் முதலியவற்றைத் தொகுத்து உணரும்போதுதான் புதிய மானுடம் குறித்துத் தெளிவாக வரையறை செய்ய முடியும். அவை தொடர்பான ஆய்வு இந்த இயலில் மேற்கொள்ளப்படுகிறது. மானுடம் - புதிய மானுடம் என்னும் சொற்களின் விளக்கம், புதிய மானுடம் பற்றி உலகில் எழுந்துள்ள கோட்பாடுகள் ஆகியவை இங்கு தொகுத்துத் தரப்படுகின்றன.

### 1.1. மானுடம் என்னும் சொல்

'மானுடம்' என்னும் சொல் இன்று பல்வேறு களங்களில் வழங்கப்பட்டு வருகின்றது. இந்தச் சொல் இன்று வழங்கப்படும் அளவுக்கு இந்த நூற்றாண்டின் தொடக்கம் வரையிலும் வழங்கப்படவில்லை. 'மனிதன்', 'மானிடன்' என்னும் சொற்களே இதுகாறும் பேச்சு மொழியிலும் இலக்கியத்திலும் பெருவழக்காய்ப் பயின்று வந்தன. இவற்றைக் காட்டிலும் விரிவான பொருளில் இப்போது 'மானுடம்' என்னும் சொல் ஒலிக்கத் தொடங்கியுள்ளது. கம்பர் கவிதையிலும்[1] சித்தர் பாடல்களிலும்[2] ஏற்கனவே சுட்டப்பட்டிருப்பினும் சமுதாயச் சிந்தனை வளர்ந்த பிறகுதான் இச்சொல் வழக்குக்கு வந்துள்ளது.

மானுடம் என்னும் சொல்லுக்கு அறிஞர்கள் விளக்கம் தந்துள்ளனர்.[3] நாடு, மொழி, கால எல்லைகளைக் கடந்து ஒட்டுமொத்தமான மனித இனத்தையும், மனிதர்தம் இயல்புகள், பண்புகள், மாண்புகள் யாவற்றையும் உள்ளடக்கிக் காட்டும் ஒரு குறியீட்டுச் சொல்லே மானுடம் ஆகும். ஆங்கிலத்தில் இதனை Humanism என்பர்.

மானுடம் என்னும் சொல்லுக்குப் பதிலாக இன்றைய அறிஞர்கள் 'மனிதம்' என்னும் புதிய சொல்லையும் பயன்படுத்தத் தொடங்கியுள்ளனர்.[4] மானுடம், மனிதம் என்னும் சொற்கள் ஒருபொருள் உடையனவே ஆகும். இவ்வாய்வேட்டில் மானுடம் என்னும் சொல்லே கையாளப்படுகின்றது.

#### 1.1.1. புதிய மானுடம் - விளக்கம்

வரலாற்றின் தொடக்க காலம் முதல் மனிதன் தன் வாழ்க்கையை ஒரு போராட்டமாகவே நடத்தி வருகின்றான். பொருளாதார, சமுதாய, அரசியல், கலாச்சார அவலங்கள் மானுடத்தின் முறையான வளர்ச்சிக்குத் தடையாக இருந்து வருகின்றன. இதனால் உடல், உள்ளம், உணர்வு

என்னும் மூன்று அடிப்படைக் கூறுகளிலும் மனிதர்கள் குறைபாடு உடையவர்களாகவே வாழ்ந்து வருகின்றனர். மானுடத்தின் வளர்ச்சிக்கான தடைகள் அகன்று, உலகம் எங்கணும் உள்ள மனிதர்கள் இம் மூன்று கூறுகளிலும் முழுமையான வளர்ச்சி நிலையை அடையும்போதுதான் மானுடம் முழுமை அடைய முடியும். இத்தகைய ஒரு நிறைவாழ்வை நோக்கி இயங்கும் மானுடமே புதிய மானுடம் ஆகும்.[5] ஆங்கிலத்தில் இதனை New Humanism என்பர்.

### 1.1.2. புதிய மானுடம் பற்றிய கோட்பாடுகள்

புதிய மானுடத்துக்கான தாகம் உலகின் எல்லாத் திசைகளிலும் எழுந்துள்ளது. வெவ்வேறு காலங்களில் - வெவ்வேறு இடங்களில் ஆன்றோர்கள் இது குறித்து சிந்தனை செய்து கருத்துக்களை வெளிப்படுத்தியதுடன் அதற்கான செயல்களிலும் ஈடுபட்டுள்ளனர். அவர்தம் கருத்துக்கள் முழுமையான அளவுக்குச் செயலாக்கம் பெறாவிட்டாலும் புதிய மானுடத்துக்கான பாதையை அமைத்துத் தருவனவாய் அமைந்துள்ளன. அவை இப்பகுதியில் வகைப்படுத்தித் தரப்படுகின்றன. விரிவஞ்சி, அவற்றுள் கோட்பாடுகளாக வடிவெடுத்தவை மட்டுமே இங்கு சுட்டப்படுகின்றன. இவ் ஆய்வாளரால் விளக்கப்படும் கோட்பாடுகள் பின்வருமாறு:

1. இந்தியப் பண்பாட்டில் மலர்ந்த கிருதயுகக் கோட்பாடு.
2. விவிலியம் குறிப்பிடும் இறையரசுக் கோட்பாடு.
3. இஸ்லாம் எதிர்நோக்கும் புத்துலகக் கோட்பாடு.
4. மார்க்சியச் சிந்தனையாளர் சுட்டும் பொதுவுடைமைக் கோட்பாடு.
5. காந்தியடிகள் கனவு கண்ட ராமராஜியக் கோட்பாடு.
6. பெரியார் விரும்பிய சுயமரியாதை உலகக் கோட்பாடு.

### 1.1.2.1. இந்தியப் பண்பாட்டில் மலர்ந்த கிருதயுகக் கோட்பாடு

அனைத்து மாந்தரும் நிறைவாழ்வு பெறும் மானுடம் ஒன்றினை இந்தியச் சிந்தனையாளர்கள் கற்பனை செய்துள்ளனர். அத்தகைய மானுடம் அமைகின்ற காலத்தைக் 'கிருதயுகம்' என்றும் இதற்கு மாறான காலத்தைக் 'கலியுகம்' என்றும் குறிப்பிட்டுள்ளனர். கிருதயுகம் என்பதற்குப் பொற்காலம் என்பதும் கலியுகம் என்பதற்குத் தீமைகளும் துன்பங்களும் நிறைந்த காலம் என்பதும் பொருளாகும்.[6]

கிருதயுகம், கலியுகம் என்னும் கருத்தாக்கங்கள் புராணக் கதைகளின் அடிப்படையில் எழுந்தனவாகும். இருப்பினும் இவை தொடர்பான சிந்தனைகள் இதிகாச காலம் முதல் இன்றைய காலம் வரை இந்திய இலக்கியங்களில் இடம்பெற்று வருகின்றன. பாமர மக்களின் உள்ளங்களிலும் இந்தக் கருத்தாக்கங்கள் ஆழப்பதிந்துள்ளன. ஆதலால், புதிய மானுடம் குறித்து ஆய்வு செய்யும்போது அதனோடு தொடர்புடைய இத்தகைய சிந்தனைகளைத் தொகுத்துரைப்பது தேவையாகின்றது. அவை,

1. கிருதயுகச் சிந்தனையின் வரலாறு
2. யுக மாற்றம் பற்றிய ஆன்றோர் கருத்துக்கள்
3. புதுயுகக் காட்சிகள்

என்னும் உட்பிரிவுகளின் கீழ் விளக்கப்படுகின்றன.

#### 1.1.2.1.1. கிருதயுகச் சிந்தனையின் வரலாறு

வட மொழியில் எழுந்த புராண மரபு சார்ந்த நூல்களில் யுகங்களின் வரிசைமுறையும் காலக் கணக்கும் கூறப்படுகின்றன. யுகங்கள் நான்கு என்றும் அவை முறையே கிருதயுகம், திரேதாயுகம்,

துவாபர யுகம், கலியுகம் என்பன என்றும் மநுதர்மம் சுட்டுகிறது. கிருதயுகத்தில் உண்மையும் அறமும் நான்கு கால்களுடன் இருந்தன என்றும் அக்கால எல்லையில் அதர்மத்தால் விளைகின்ற துன்பங்கள் மனிதர்களை அணுகியதில்லை என்றும் மனிதர்கள் அறமன்றி வேறெதுவும் அறியாதவர்களாய் வாழ்ந்ததனால் எண்ணியவையெல்லாம் எய்தப்பெற்றனர் என்றும் மநுதர்மம் கூறுகிறது. பிறயுகங்களில் மனிதர்களின் தவறான செயல்களால் உண்மையும் அறமும் ஒவ்வொரு காலாகக் குறைந்து, தீமைகளும் துன்பங்களும் பெருகி வருகின்றன என்றும் அந்நூல் விளக்கிச் செல்கிறது.[7]

நான்கு யுகங்களுள் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் என்னும் மூன்று யுகங்கள் முடிந்து இப்போது உண்மையும் அறமும் குன்றிப்போன கலியுகம் நடந்துகொண்டிருக்கிறது என்பதும், அதனால்தான் இவ்வுலகில் அவலங்கள் மிகுந்துள்ளன என்பதும் இந்திய மக்களின் நம்பிக்கையாகும். கலி என்னும் சொல் தீமை, துன்பம் முதலானவற்றை விளக்கும் குறியீட்டுச் சொல்லாகவே இலக்கியங்களில் பயின்று வருவதையும் அறியலாம்.[8]

யுகங்கள் பற்றிய நம்பிக்கை சமுதாயத்திற்குத் தீமையும் அளித்துள்ளது; நன்மையும் அளித்துள்ளது. கடந்த காலத்தைப் பொற்காலம் என்று நம்பி, நிகழ்காலம் துன்பமான காலம் என மயங்கி, மனிதர்கள் செயலிழந்துபோகவும் இது காரணமாக அமைந்தது. இதற்கு மாறாக, யுக வட்டம் முழுமை அடையும்போது மறுபடியும் ஒரு பொற்காலம் மலரும் என்ற நம்பிக்கையையும் இது ஏற்படுத்தியுள்ளது.[9]

யுகம் மாறும் என்று நம்பிக்கை அளித்தவர்களுள் நம்மாழ்வார், வைகுண்டர்,[10] விவேகானந்தர், பாரதி முதலானோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் மக்களோடு இணைந்து வாழ்ந்து அவர்தம் பிரச்சினைகளை நன்கு உணர்ந்தவர்கள். அவலங்கள் அகன்ற மானுடத்தை உருவாக்க முடியும் என்று நம்பியதுடன் அதற்கான செயல்களிலும் ஈடுபட்டவர்கள். மக்களுக்கு உணர்வூட்டுவதற்காக இவர்கள் யுகமாற்றம் பற்றிய சிந்தனைகளை எழுப்பி வந்தனர்.

கிருதயுகம் மலர வேண்டும் என்னும் தமது வேட்கையை,

திரியும் கலியுகம் நீங்கித்

தேவர்கள் தாமும் புகுந்து

பெரிய கிருதயுகம் பற்றிப்

பேரின்ப வெள்ளம் பெருக

என்னும் கவிதை வழியாக வெளிப்படுத்தியுள்ளார் நம்மாழ்வார். 'கலியும் கெடும் கண்டு கொண்மின்' என்று யுக மாற்றம் குறித்து அவர் நம்பிக்கையும் அளித்துள்ளார்.[11]

கலியை 'மாயக்கலி', 'நீசக்கலி' எனப் பழித்த வைகுண்டர் அதனை அழிப்பதே தமது பிறப்பின் நோக்கம் எனக் கூறினார். தமது வருகையால் கலியுகம் அழியத் தொடங்கி விட்டதென்றும் குறிப்பிட்டார். கலிக்குப் பிறகு வரும் புது யுகத்தினை அவர் 'தர்மயுகம்' எனச் சுட்டினார்.[12]

யுக வட்டம் முழுமை அடைகின்ற நிலைக்கு வந்துள்ளது எனக் குறிப்பிட்டார் விவேகானந்தர். மலரவிருக்கும் புதுயுகத்திற்கு அவர் 'சத்தியயுகம்' என்று பெயர் சுட்டினார்.[13] அவருடைய நவ பாரதச் சிந்தனையும் இதனுடைய ஒரு வெளிப்பாடேயாகும்.

'பாரத நாட்டில் இப்போது கலியுகம். ஆனால் இன்னும் இரண்டு மூன்று தலைமுறைகளில் கலியுகம் நீங்கிக் கிருதயுகம் பிறக்கப்போகின்றது' என்பது பாரதி வாக்கு.[14]

'கலிசாடும் திறன் எனக்குத் தருவாய்'

'கலியைப் பிளந்திடக் கையோங்கினோம்'

எனக் கலிக்கு எதிராக முழங்கியதுடன் கிருதயுகத்தைத் தாம் படைக்கப்போவதாகவும் அவர் அறைகூவல் விடுத்தார். 'அமரநிலை' என்னும் தொடர்வழியாகவும் இந்தக் கருத்தாக்கத்தைக் குறியீடு செய்துள்ளார்.[15]

நம்மாழ்வாரும் பாரதியும் குறிப்பிடும் கிருதயுகம் என்பதற்கும் வைகுண்டர் கூறும் தர்மயுகம் என்பதற்கும் விவேகானந்தர் சுட்டும் சத்தியயுகம் என்பதற்கும் பொருள் ஒன்றே. மாந்தர் அனைவரும் நிறைவாழ்வு எய்தும் புதிய மானுடம் என்பதே அவற்றின் பொருளாகும். இவை அனைத்தும் இந்தியச் சிந்தனையில் மலர்ந்த கிருதயுகக் கோட்பாட்டை ஒட்டிய செய்திகளேயாகும்.

### 1.1.2.1.2. யுக மாற்றம் பற்றிய ஆன்றோர் கருத்துக்கள்

கலியுகம் அகன்று புதுயுகம் மலரவேண்டுமெனில் நாட்டில் நிலவும் பொருளாதார, சமுதாய, அரசியல், கலாச்சார அவலங்கள் முற்றிலும் ஒழிக்கப்பட வேண்டுமென ஆன்றோர் கருத்து தெரிவித்தனர்; அதற்காக மனிதர்கள் மேற்கொள்ள வேண்டிய கடமைகளையும் சுட்டிக்காட்டினர்.

#### 1.1.2.1.2.1. பொருளியல் பார்வைகள்

நாட்டின் வறுமையை எண்ணி வருந்திய வைகுண்டர், மக்கள் தேவைக்கு உண்டு மகிழ்ந்து நெடுநாள் வாழ்ந்திருக்கும் காலமே தர்மயுகம் எனக் கூறினார்.[16] நவபாரதம் குறித்துச் சிந்தித்த விவேகானந்தர் நாட்டின் ஏழ்மை கண்டு இரங்கியதுடன் அந்த நிலை மாறவேண்டும் என்றும் குரல் கொடுத்தார்.[17] கிருதயுகம் மலரவேண்டுமெனில் வறுமை ஒழிந்து செல்வம் கொழிக்க வேண்டுமென்று பாரதி உணர்வு பொங்க உரைத்துள்ளார்.[18] வறுமையை ஒழிப்பதற்குப் பொதுவுடைமையை வரவேற்கும் நிலையும் பாரதியிடம் காணப்படுகிறது.[19] யுகமாற்றம் நிகழ வேண்டுமெனில் வறுமை ஒழிய வேண்டுமென ஆன்றோர் கருதியுள்ளனர் என்பது இந்தச் செய்திகள் வழியாகத் தெளிவுபடுகிறது.

#### 1.1.2.1.2.2. சாதி பற்றிய சிந்தனைகள்

இந்திய நாட்டின் வறுமை நிலைக்கும் ஏனைய சமுதாய அவலங்களுக்கும் அடிப்படைக் காரணமாக இருப்பது சாதிக் கொடுமையே என்பதனை ஆன்றோர் உணர்ந்தனர். ஆதலால், சாதி ஒடுக்குமுறைகளுக்கு எதிரான சிந்தனையைக் கூர்மையாக வெளிப்படுத்தினர்.

'ஒக்கத் தொழுகிற்றிராகில் கலியுக மொன்று மில்லையே' என்றார் நம்மாழ்வார்.[20] 'இங்கு ஒக்கத் தொழுதல்' என்பதற்குச் சாதிப் பிரிவினைகளை மறந்து அனைவரும் இணைந்து தொழுதல் என்று விளக்கம் அளித்துள்ளார் பாரதியார்.[21]

கலி அழிய வேண்டுமெனில் சாதி அடிமைத்தனங்கள் ஒழிய வேண்டுமென வைகுண்டர் கருதினார். மேல்சாதிக்காரர்களுக்கு அடிபணியாமல் மாந்தர் அனைவரும் உரிமை உணர்வோடு வாழத்தொடங்கினால் கலி அழிந்துவிடும் என்று நம்பினார். கலியை அழிப்பதற்கு இத்தகைய மான உணர்வுதான் தேவையேயன்றி கணை, ஆழி போன்ற ஆயுதங்கள் தேவையில்லை என்று உணர்ந்தார். இதனையே அவர் கூற்றாக அமைந்துள்ள,

கலியென்றால் எலியல்லவே கணையாழி வேண்டாமே

வலிமாய நினைவு மாய்மாலம் என்மகனே

ஆனதால் ஆயுதங்கள் அம்புதடி வேண்டாமே

மானமாக இருந்தால் மாளுங்கலி தன்னாலே

என்னும் பாடல் தெளிவுபடுத்துகிறது.[22] சாதிக் கொடுமை மேலோங்கியிருந்த காலகட்டத்தில் தான்

அவர் தமது பணியைத் தொடங்கினார் என்பதும் சாதி ஒடுக்குமுறைகளுக்கு எதிராகக் கடுமையான போராட்டங்களை நடத்தினார் என்பதும் இங்கு நினைக்கத்தக்கன.

தேசத்தின் சிறுமைக்குத் தீண்டாமைக் கொடுமையே முக்கிய காரணம் என்றார் விவேகானந்தர். சாதி பேதங்கள் ஒழிந்து, தாழ்த்தப்பட்ட மக்களும் வாழ்வுபெற்று, அனைத்து மாந்தரும் உணர்வு நிலையில் மேம்பட்டு விளங்கும்போதுதான் சத்தியயுகம் மலர முடியும் என அவர் தெளிவுபடுத்தினார்.[23]

கிருதயுகம் மலர வேண்டுமெனில் சாதி வேற்றுமையுடன் நிற, தேச வேற்றுமைகளும் ஒழிய வேண்டுமென்று விரிவான பொருளில் சிந்தித்துள்ளார் பாரதியார்.[24]

யுக மாற்றம் நிகழ வேண்டுமெனில் சாதி ஒடுக்குமுறைகள் ஒழிந்து அனைத்து மாந்தரும் அன்புடன் வாழவேண்டும் என்னும் கருத்தினை ஆன்றோர் கொண்டிருந்தனர் என்பது இந்தச் செய்திகள் வழியாகத் தெளிவுபடுகிறது.

### 1.1.2.1.2.3. சமயப் பார்வைகள்

யுக மாற்றம் குறித்துச் சிந்தித்த பெரியோர்கள், சமயங்கள் சமுதாயப் பணியில் ஈடுபட வேண்டுமென விழைந்தனர். சமுதாயப் பணியையே சமயப் பணியாகக் கருதி உழைத்தார் வைகுண்டர். 'மனிதப் பணியே இறைப்பணி' என்று தெளிவுபடுத்திய விவேகானந்தர் மானுடத்தின் மேம்பாட்டுக்கான பணிகளையே தம் வாழ்நாள் முழுதும் செய்துவந்தார்.[25]

புதுயுகம் மலர வேண்டுமெனில் சமயங்கள் சமுதாயப் பணி புரிவதுடன் பல்வேறு சமயத்தவர் தமக்குள் இணக்கமுடன் வாழவேண்டும் என்பதையும் ஆன்றோர் உணர்ந்தனர். நவபாரதம் படைப்பதற்கு இளைஞர்களை அழைத்த விவேகானந்தர் சமயத்துறையில் அவர்கள் மேற்கொள்ளவேண்டிய அணுகுமுறையைத் தெளிவுபடுத்தினார். ஒரே இறைவனைத்தான் ஒவ்வொரு சமயத்தவரும் ஒவ்வொரு பெயரில் வழிபட்டு வருகின்றனர்; தர்மத்தின் முதல்படி மற்றவர்களின் சமய நம்பிக்கையைக் கனிவுடன் பார்ப்பதேயாகும்; பிறசமய வழிபாடுகளிலும் தனது இறைவனைக் காணத் தெரிந்தவனே உண்மையான பக்தன். இவ்வாறு கூறி சமய ஒருமைப்பாட்டுக்கு அவர் வழிகாட்டினார்.[26]

மனிதர்கள் அடையவேண்டிய அமர வாழ்வு குறித்துப் பேசுமிடத்தில் பாரதியும் இதே உணர்வினை வெளிப்படுத்தியுள்ளார்; சிவன், திருமால், பிதா, அல்லா என்பனவெல்லாம் ஒரே இறைவனைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள் எனக் கூறியுள்ளார்.[27] பிற சமயங்களைப் பழிப்பதும் பகைப்பதும் மூடச் செயல்கள் எனவும் அவர் மொழிந்துள்ளார்.[28]

யுக மாற்றத்திற்குச் சமய நல்லிணக்கம் தேவை என்பதனை இந்தச் செய்திகள் புலப்படுத்துகின்றன.

### 1.1.2.1.2.4. பெண் விடுதலை

விவேகானந்தரும் பாரதியும் பெண் விடுதலைக்கும் மிகுந்த முக்கியத்துவம் அளித்துள்ளனர். பெண்களும் ஆண்களைப் போல கல்வியிலும் அறிவிலும் சிறந்து விளங்க வேண்டும்; தங்கள் பிரச்சினைகளைத் தாங்களே தீர்த்துக்கொள்ள அவர்கள் முன்வர வேண்டும் என்று விவேகானந்தர் குரல் கொடுத்தார்[29] அவரது நிறுவனத்தில் பெண் சீடர்களுக்கும் இடமளித்தார்.[30]

பெண்ணடிமைத்தனமே கலியுகத்தின் தொடக்கம் என்பது பாரதியின் கருத்து. 'பெண்ணைத் தாழ்வாகவும் ஆணை மேலாகவும் கருதி நடத்தும் முறை தவறு. அது துன்பங்களுக்கெல்லாம் அஸ்திவாரம். அநீதிகளுக்கெல்லாம் கோட்டை, கலியுகத்திற்குப் பிறப்பிடம்' என்னும் அவரது கூற்றால் இதனை அறியலாம்.[31]

பெண் விடுதலை இன்றியும் யுக மாற்றம் நிகழாது என்பதற்கு இந்தக் கருத்துக்கள் சான்றாக உள்ளன.

### 1.1.2.1.2.5. அரசியல் அணுகுமுறைகள்

யுக மாற்றம் குறித்துப் பேசிய ஆன்றோர் அரசியல் அடிமைத்தனங்களுக்கு எதிராகவும் குரல் கொடுத்துள்ளனர். திருவுடை மன்னனைத் திருமாலாகக் காண்பது இந்நாட்டு மரபு. வைகுண்டர் இம் மரபை உடைத்தார். சாதிக் கொடுமைக்குத் துணை நிற்கும் மன்னனை அவர் 'கலி' என்று வருணித்தார்.[32] உரிமைக்குரல் எழுவதை அவர் தர்ம யுகத்தின் தொடக்கமாகக் கருதினார்; ஒடுக்கப்படும் மக்களைப் பார்த்து,

'கேடு வரும் உனக்குக் கேள்வி கேளாதிருந்தால்'

என்று ஆணையிட்டார்.[33] பாரதியும் 'ஜார்' என்னும் கொடுங்கோல் மன்னனின் ஆட்சி வீழ்வதைக் கலியின் வீழ்ச்சியாகப் பார்த்தார். அனைத்து மாந்தரின் உரிமைகளும் உணர்வுகளும் மதிக்கப்படும் காலத்தையே அவர் கிருதயுகத்தின் தொடக்கமாகக் கருதினார்.[34] கிருதயுகத்தின் அமைவுக்கு அரசியல் விடுதலையும் இன்றியமையாதது என்பது இங்கு உணர்த்தப்படுகிறது.

### 1.1.2.1.2.6. கலாச்சார மாற்றம்

யுக மாற்றம் நிகழ்வதற்கு கலாச்சார மாற்றத்தின் தேவையையும் ஆன்றோர் உணர்ந்துள்ளனர்; மக்களின் எண்ணங்கள், பார்வைகள், வாழ்க்கைமுறைகள் முதலியவற்றில் மிகப்பெரும் மாறுதல்கள் தேவை எனத் தெளிவுபடுத்தியுள்ளனர். கல்வி பெருகுதல், அறிவியல் வளர்தல், பொதுமை உணர்வுகள் உருவாதல், நீதியும் நேர்மையும் நிலவுதல், உயிரினங்களைப் பேணுதல், சுற்றுப்புறச்சூழல் பாதுகாக்கப்படுதல் முதலிய கலாச்சாரக் கூறுகளை அவர்கள் வலியுறுத்தியுள்ளனர்.[35] இத்தகைய கலாச்சார மாற்றங்கள் இன்றியும் யுக மாற்றம் நிகழாது என்பதே ஆன்றோர் கருத்தாகும்.

யுக மாற்றம் குறித்துச் சிந்திக்கும்போது இன்னொன்றையும் கருத்தில் கொள்ளவேண்டும். மநுதர்மத்தில் கிருதயுகம் பற்றிய கனவு இருப்பினும் அந்நூல் பிறப்பின் அடிப்படையில் சாதியினை வகுத்துக் கூறியுள்ளதோடு பெண்ணடிமைத்தனத்திற்கும் உடன்பட்டு நிற்கிறது.[36] ஆனால், இடைக்காலத்தில் வாழ்ந்த நம்மாழ்வாரும் பிற்காலத்தில் வந்த வைகுண்டர், விவேகானந்தர், பாரதி முதலானோரும் மநுவின் சாதிக் கோட்பாட்டை ஏற்கவில்லை. சாதி ஒடுக்குமுறைகள் ஒழிந்த நிலையினையே அவர்கள் புதுயுகமாகப் பார்த்தனர். பிற்காலத்தில் வந்த பெரியோர்கள் பெண் விடுதலை, அரசியல் விடுதலை குறித்தும் தீவிரமாகக் குரல் கொடுத்துள்ளனர். அத்துடன், தம் காலத்தின் உயரிய லட்சியங்கள் யாவற்றையும் அவர்கள் கிருதயுகம் என்னும் சொல்லின்மேல் ஏற்றிக் கூறியுள்ளனர். இவ்வாறு கிருதயுகம் என்னும் சொல்லின் பொருள் காலந்தோறும் வேறுபட்டு - விரிவுபட்டு ஒரு தெளிவை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறது என்பதனை உணர்தல் வேண்டும். கரும் பொன்னைச் செம்பொன் ஆக்குவதுபோல் இது ஒரு வகையான ரசவாதம் என்பர் அறிஞர்.[37] இன்றைய நோக்கில் பார்க்கும்போது வைகுண்டர், விவேகானந்தர், பாரதி முதலான பிற்காலச் சான்றோர் எழுப்பியுள்ள சிந்தனைகளே புதிய மானுடத்தின் அமைவுக்குப் பெருந்துணை புரிவனவாய் அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

### 1.1.2.1.3. புதுயுகக் காட்சிகள்

கலிக்குப் பிறகு அமையும் புதுயுகத்தினை வைகுண்டர் தமது உள்ளக் காட்சியில் கண்டு வெளிப்படுத்தியுள்ளார். அவர் வெளிப்படுத்தும் காட்சி நிலைகள் பின்வருமாறு:

'புதுயுகம் புதுவிருச்சம் புதுமனுப் புதுப்புத்தியும்
நெதிவு சற்றுமில்லா நின்றிலங்கு மாபதியும் ...'
'மண்ணெல்லாம் தர்ம வயல்போல் விளைந்திருக்கும்'

'தம்மனுவோர் போல தழைத்திருந்து வாழ்வார்கள்
ஒக்கவொரு யினம்போல் உகந்திருந்து வாழ்வார்கள்'
'தர்மபுவி கண்டு தாமிருக்கு மக்களுக்கு
வர்மமில்லை நோவுமில்லை மறலிவினை தானுமில்லை'
'வாயுவே பூப்போல் மலரெடுத்து வீசி நிற்கும்'
'ஆயுங் கலைத் தமிழும் அறிவும் ஒன்று போல் பரவும்' [38]

புதிய மானுடத்தில் மண்ணும் விண்ணும் புதிதாய்த் துலங்கும் என்பதும் மாந்தர் அனைவரும் ஒத்தொருமித்து மனநிறைவுடன் வாழ்வர் என்பதுமே இங்கு கூறப்படும் செய்தியாகும்.

யுக மாற்றம் பற்றிய செய்திகளைத் தொகுத்துப் பார்க்கும்போது பின்வரும் கருத்துக்கள் விளக்கம் பெறுகின்றன:

கிருதயுகம் என்னும் சொல் தீமையற்ற மானுடம் அமைகின்ற காலத்தைக் குறிக்கும் சொல்லாக இந்திய மண்ணில் வழங்கப்பட்டு வருகிறது. வைகுண்டர், விவேகானந்தர், பாரதியார் முதலானோர் வாயிலாக இக்கோட்பாடு புதிய விளக்கம் பெற்றுள்ளது. யுக வட்டம் முழுமை அடையும்போது கிருதயுகம் தானாக அமையும் என்று கூறாமல், அதற்கு மனிதர்களின் கடுமையான முயற்சி தேவை என்பதனை இவர்கள் தங்கள் அனுபவ வாயிலாக உணர்ந்து வெளிப்படுத்தியுள்ளனர். இவர்தம் சிந்தனைகள் நம்பிக்கை அளிப்பனவாகவும் செயலுக்கு வழிவகுப்பனவாகவும் அமைந்துள்ளன.

### 1.1.2.2. விவிலியம் குறிப்பிடும் இறையரசுக் கோட்பாடு

இந்தியப் பண்பாட்டில் கிருதயுகச் சிந்தனை உருவானது போல பாலஸ்தீனத்தில் வாழ்ந்த யூதர்கள் நடுவிலும் புதிய மானுடம் பற்றிய ஒரு கோட்பாடு எழுந்துள்ளது. அதுவே இறையரசுக் கோட்பாடு ஆகும். இக்கோட்பாடு, அங்கு வாழ்ந்த தீர்க்கதரிசிகளால் அடித்தளம் அமைக்கப்பட்டு யேசுநாதரால் வளர்த்தெடுக்கப்பட்ட ஒரு கோட்பாடு ஆகும். தீமைகள் நிறைந்த உலகைத் தீர்க்கதரிசிகளும் யேசுவும் இறைவன் இல்லாத உலகமாகவும் தீமைகள் அகன்ற உலகை இறையாட்சி நிலவும் உலகமாகவும் உணர்ந்தனர். எனவேதான் அவர்கள் எதிர்நோக்கிய லட்சிய உலகு 'இறையரசு' என்னும் பெயர் பெற்றது.[39] இறையரசு பற்றிய தெளிவான விளக்கம்,

1. இறையரசுக் கோட்பாட்டின் வரலாற்றுப் பின்னணி
2. தீர்க்கத் தரிசிகளின் கனவுகள்
3. யேசுநாதரின் சமுதாயக் கோட்பாடுகள்

என்னும் தலைப்புகளின் கீழ் தரப்படுகின்றது.

#### 1.1.2.2.1. இறையரசுக் கோட்பாட்டின் வரலாற்றுப் பின்னணி

பாலஸ்தீனத்தில், யேசுவின் காலத்திலும் அவருக்கு முன்னர் வாழ்ந்த தீர்க்கத்தரிசிகளின் காலத்திலும் பொருளாதார, சமுதாய, அரசியல், கலாச்சார அவலங்கள் மிகுந்திருந்தன. வலிமை படைத்தவர்கள் தவறான வழிகளில் பொருள்சேர்த்து பகட்டு வாழ்க்கை வாழ்ந்தனர். பெரும்பான்மையான மக்கள் வறுமையில் உழன்றனர். ஆளுவோர் சுயநலம் மிகுந்தவர்களாகவும் பேராசை கொண்டவர்களாகவும் காணப்பட்டனர். ஏழை எளிய மக்களை அவர்கள் ஒடுக்கினர். கொடுமையும் முறைப்பாடும் எங்கும் எதிரொலித்தன. பெண்கள் விலங்கினும் கீழாகக் கருதப்பட்டனர். அன்றைய சமயம் சடங்குகளில் மட்டுமே மையம் கொண்டிருந்தது. நீதி, நேர்மை பற்றி சமயவாதிகள் கவலைப்படவில்லை. இந்தச் சூழ்நிலையில் அங்கு தோன்றிய தீர்க்கத்தரிசிகள் ஒடுக்கப்பட்ட மக்களின் சார்பாக நின்று சிந்தித்தனர். புத்துலக வேட்கையால் உந்தப்பட்டு களத்தில்

வந்து செயல்படத் தொடங்கினர். ஊழல்களையும் ஒடுக்குமுறைகளையும் எதிர்த்தனர்; ஒடுக்குவோரை எச்சரித்தனர். அன்பு, நீதி, சமத்துவம் என்னும் புதிய மதிப்பீடுகளைச் சமுதாயத்தில் உருவாக்க முயன்றனர். மானுட விடுதலைக்காக எந்தத் துன்பத்தையும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்தனர். எதிர்காலத்திலேனும் அவலங்கள் ஒழிந்த புதிய உலகம் ஒன்று அமையும் என்று நம்பினர். தாம் எதிர்நோக்கிய அந்த லட்சிய உலகினைப் 'புதிய வானம் புதிய பூமி' என்று பேசி வந்தனர்.[40] அதனையே யேசு 'இறையரசு' என்று குறிப்பிட்டார்.[41]

அவலங்கள் அகன்ற புதுவாழ்வு குறித்துத் தீர்க்கத்தரிசிகள் சொன்னவை கிறிஸ்தவத் திருமறையான விவிலியத்தின் பழைய ஏற்பாட்டுப் பகுதியிலும் யேசு குறிப்பிட்டவை புதிய ஏற்பாட்டுப் பகுதியிலும் இடம்பெற்றுள்ளன. பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் இவை இரண்டுவிதமாகச் சொல்லப்பட்டிருந்தாலும் இரண்டும் ஒன்றுதான் என்பதனை யேசு தமது நாசரேத் அறிக்கையில் தெளிவுபடுத்தினார்.[42] பழைய ஏற்பாட்டுத் தீர்க்கத்தரிசனப் பகுதியின் தொடர்ச்சியாகவே யேசுவின் சிந்தனைகள் அமைந்துள்ளன.

### 1.1.2.2.2. தீர்க்கத் தரிசிகளின் கனவுகள்

புத்துலகக் கனவில் ஈடுபட்ட தீர்க்கத்தரிசிகள் தாம் எதிர்நோக்கிய புதிய உலகின் காட்சிகளைத் தம் உள்ளுணர்வில் கண்டு அவ்வப்போது மக்களுக்கு உணர்த்தி வந்தனர். அவற்றைத் தொகுத்துப் பார்க்கும்போது அவை புதிய மானுடக் காட்சிகளாகவே புலப்படுகின்றன. அவை பின்வருமாறு:

- 'பள்ளங்கள் எல்லாம் நிரப்பப்படும்; எல்லா மலைகளும் குன்றுகளும் தாழ்த்தப்படும். கரடுமுரடுகள் சமவெளிகள் ஆகும்; கோணல்கள் நேராகும்.' [43]

உருவக நிலையில் அமைந்துள்ள இப்பகுதிக்கு இறையியல் அறிஞர்கள் விளக்கம் தருகின்றனர். அந்த விளக்கம் பின்வருமாறு:

பள்ளங்கள் நிரப்பப்படும் என்பதற்கு ஏழ்மை அகற்றப்படும் என்பது பொருள். மலைகளும் குன்றுகளும் தாழ்த்தப்படும் என்பதற்குச் செல்வம், அதிகாரம் என்னும் மேடுகள் உடைக்கப்படும் என்பது பொருள். கரடுமுரடுகள் சமவெளிகள் ஆகும் என்பதற்கு ஒடுக்குமுறைகள் தவிர்க்கப்படும் என்பது பொருள். கோணல்கள் நேராகும் என்பதற்கு முறைகேடுகள் ஒழியும் என்பது பொருள்.[44]

- 'செம்மறியோடு ஓநாய் தங்கியிருக்கும்; வெள்ளாட்டுக்குட்டியோடு சிறுத்தைப்புலி படுத்துறங்கும்; கன்றும் சிங்கமும் ஒன்றாய் மேயும்.' [45]

இங்கு செம்மறி, வெள்ளாட்டுக்குட்டி, கன்று என்பன எளியவர்களைக் குறிக்கும் குறியீட்டுச் சொற்கள்: ஓநாய், சிறுத்தைப்புலி, சிங்கம் என்பன வலியவர்களைக் குறிக்கும் குறியீட்டுச் சொற்கள். இறையரசு மலரும்போது எளியோரை வலியோர் ஒடுக்கும் ஒடுக்குமுறைகள் ஒழிந்து அனைவரும் ஒன்றாகும் நிலை உருவாகும் என்பது இதன் பொருள்.

- 'அவர்களோ, தங்கள் வாள்களைக் கலப்பைக் கொழுக்களாகவும் தங்கள் ஈட்டிகளை அரிவாள்களாகவும் அடிப்பார்கள்; நாட்டுக்கு எதிராய் நாடு வாள் எடுக்காது; அவர்களுக்கு இனி போர்ப் பயிற்சியும் அளிக்கப்படாது. அவர்களுள் ஒவ்வொருவனும் தன் தன் திராட்சைக் கொடியின் கீழும் அத்திமரத்தினடியிலும் அமர்ந்திருப்பான். அவர்களை அச்சுறுத்துகிறவன் எவனுமில்லை.' [46]

பகையும் போரும் ஒழிந்து மனிதர் அனைவரும் அச்சமின்றி வாழ்வர் என்பது இதன் பொருள்.

- 'அவர்கள் வீடு கட்டிக் குடியிருப்பார்கள்; திராட்சைக் கொடிகளை நட்டு அவற்றின் கனிகளை உண்பார்கள். வேறொருவன் குடியிருக்கும்படி அவர்கள் வீடு கட்டமாட்டார்கள்; அந்நியன் சாப்பிடும்படி திராட்சைக் கொடிகளை நடமாட்டார்கள்.' [47]

உழைப்புச் சுரண்டலுக்கு அங்கு இடமிருக்காது என்பதே இதன் பொருள்.

- 'சகல ஜனங்களும் தங்கள் தங்கள் தேவனுடைய நாமத்தைப் பற்றிக்கொண்டு நடப்பார்கள். நாங்களும் எங்கள் தேவனாகிய கர்த்தருடைய நாமத்தைப் பற்றிக்கொண்டு என்றென்றைக்குமுள்ள சதா காலங்களிலும் நடப்போம்.' [48]

சமயங்கள் பல இருக்கும்; ஆனால், சமயச் சண்டைகள் இருக்காது என்பதே இங்கு உணர்த்தப்படும் செய்தியாகும்.

- 'அப்போது குருடருடைய கண்கள் திறக்கப்படும்; செவிடரின் காதுகள் கேட்கும் ஆற்றல் பெறும். முடவன் மான்கன்று போலத் துள்ளுவான்; ஊமைகளின் நாக்கு மகிழ்ச்சியால் பாடும்.[49]

- அதில் சிலநாட்களே வாழ்ந்த சிறுவனோ, தன் வாழ்நாளை நிறைவு செய்யாக் கிழவனோ இருக்கமாட்டார்கள்.[50]

ஊனமுற்றவர்கள் இருக்கமாட்டார்கள் என்பதும் மனிதர் யாவரும் நீண்ட ஆயுள் பெறுவர் என்பதுமே இந்தச் செய்திகளின் சாரமாகும்.

- 'பாழ்வெளியில் நீரூற்றுகள் பீறிட்டுக் கிளம்பும். பாலைநிலத்தில் நீரோடைகள் வழிந்தோடும். கொதிக்கும் மணல் பரப்பு நீர் நிறைந்த குளமாகும்.' [51]

பூமியின் எல்லாப் பகுதிகளும் செழிப்புறும் என்பது இதன் பொருள்.

- 'நம் பரிசுத்த மலையெங்கும் தீங்கு செய்வதோ, கேடுவிளைவிப்பதோ யாதும் இராது. ஏனெனில் தண்ணீர் கடலை நிரப்பியிருப்பதுபோல் ஆண்டவரைப் பற்றிய அறிவு நாட்டை நிரப்பும்.' [52]

- 'இதோ, புதிய வானத்தையும் புதிய பூமியையும் நாம் படைக்கிறோம். முன்னையவை நினைவில் இருக்கமாட்டா; எண்ணத்திலும் தோன்றமாட்டா.' [53]

தீய நினைவுகள் முற்றிலும் ஒழிந்து மனிதர் அனைவரும் நல்லுணர்வு பெற்றோராய் வாழ்வர் என்பதே இந்த வசனங்களின் உள்ளடக்கமாகும்.

இத்தகைய இனியதோர் உலகைக் கற்பனை செய்யும் விவிலியம் உலகின் தொடக்க காலமும் இனிதாகத்தான் இருந்தது எனக் குறிப்பிடுகிறது. மனிதர்களின் உள்ளத்தில் தீய எண்ணங்கள் உருவாகி அவர்கள் தீய செயல்களை மேற்கொள்ளத் தொடங்கிய பிறகுதான் மானுடம் வீழ்ச்சியடைந்தது என விவிலியம் சுட்டுகிறது. மனிதர்கள் நெறிப்படும்போது மறுபடியும் மானுடம் நிறைவாழ்வுபெறும் என அது உணர்த்துகிறது.[54]

### 1.1.2.2.3. யேசுநாதரின் சமுதாயக் கோட்பாடுகள்

தீர்க்கத்தரிசிகளின் கனவுகளுக்குச் செயல் வடிவம் கொடுக்க முனைந்தார் யேசு. இறையரசை உருவாக்குவதற்காக இவ்வுலகுக்கு, தாம் இறைவனால் அனுப்பப்பட்டிருப்பதாக அவர் உணர்ந்தார். 'எளியோர்க்கு நற்செய்தி சொல்லவும் சிறைப்பட்டோர் விடுதலை அடைவர், குருடர் பார்வை பெறுவர் என்று அறிவிக்கவும் ஒடுக்கப்பட்டோருக்கு உரிமை வாழ்வு வழங்கவும் … அவர் என்னை அனுப்பினார்' என்னும் அறைகூவலோடுதான் சமுதாயத்தில் அவர் அறிமுகமானார்.[55] இழந்துபோனதைத் தேடி மீட்பதுதான் தமது பிறப்பின் நோக்கம் என்று தெளிவுபடுத்தினார்.[56] மன மாற்றம் அடையுங்கள் என்று மக்களைப் பார்த்து முழங்கினார். பொருளாதாரம், சமுதாயம், அரசியல், கலாச்சாரம் முதலியவற்றில் மனிதர்கள் மேற்கொள்ளவேண்டிய நெறிமுறைகளைக் கோடிட்டுக் காட்டினார்.

### 1.1.2.2.3.1. பொருளியல் பார்வைகள்

வறுமைக்கும் பட்டினிச் சாவுக்கும் காரணம் என்னவென்பதை ஆய்வு செய்த யேசுநாதர், பொருட்செல்வம் சிலரிடத்தில் குவிவதே அதன் காரணம் என்பதைக் கண்டு தெளிந்தார். ஆதலால், செல்வம் ஓரிடத்தில் குவிவதை எதிர்த்தார். சொத்துக்களை ஏழைகளுக்குப் பகிர்ந்து கொடுக்குமாறு செல்வந்தர்களைப் பார்த்து ஆணையிட்டார். அவ்வாறு செய்யாதவர்களுக்கு இறையரசில் இடம் இல்லையென்று எச்சரித்தார். ஏழைகளைச் சுரண்டி வாழ்வோரை வன்மையாகக் கண்டித்தார்; எளியவர்களுக்கு உதவி செய்வது இறைவனுக்குக் கொடுப்பது என்னும் கருத்தினை மக்களிடம் பரப்பினார்.[57] உழைப்பவர்களுக்கு, அவர்களின் வாழ்க்கைத் தேவைக்கேற்ற ஊதியம் வழங்கப்பட வேண்டும் என்பதனை வலியுறுத்தினார்.[58] இறையரசின் உருவாக்கத்திற்கு வறுமை ஒழிக்கப்பட வேண்டும் என்பது இந்தச் செய்திகள் வாயிலாகத் தெளிவுபடுகிறது.

### 1.1.2.2.3.2. சாதிப் பிரச்சினை

யேசுவின் காலத்திலும் சாதிக்கொடுமை தலைவிரித்தாடியது. தம்மை உயர்சாதியினராகக் கருதிக்கொண்ட யூதர்கள் 'சமாரியர்' என்னும் இனத்தவரை தீண்டத்தகாதவர்களாகக் கருதி ஒதுக்கி வைத்திருந்தனர். இந்தச் சாதிக் கட்டுப்பாட்டை உடைத்தார் யேசு. தாழ்த்தப்பட்ட மக்களின் தெருவுக்குச் சென்றார்; அவர்களோடு உரையாடினார்; உண்டார் ; அவர்களுக்கு அறிவுரை கூறினார்; அவர்கள் நோய்வாய்ப்பட்டபோது குணப்படுத்தினார்; அவர்களின் நற்பண்புகளை எடுத்துக்காட்டி அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ளுமாறு யூதர்களை வேண்டினார்.[59] இறையரசின் உருவாக்கத்திற்குச் சாதிக் கட்டுப்பாடுகள் ஒழிய வேண்டும் என்பதனை இவ்வாறு தமது பணிகளின் வாயிலாக யேசு உணர்த்திச் சென்றார்.

### 1.1.2.2.3.3. சமய அணுகுமுறைகள்

மனிதனுக்காகத்தான் சமயமேயன்றி சமயங்களுக்காக மனிதன் இல்லை என்னும் கொள்கையைக் கொண்டிருந்தார் யேசு. பொருளற்ற சமயச் சடங்குகளில் அவருக்கு உடன்பாடு இல்லை. மானுடத்துக்குப் பயன்படாத சமயச் சட்டங்களை அவர் மீறினார். சுயநலத்தோடும் போலித்தனங்களோடும் வாழ்ந்த சமயத் தலைவர்களைக் கண்டித்தார். 'குருட்டு வழிகாட்டிகள்', 'வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகள்', 'கள்ளம் மிக்கவர்கள்' என்றெல்லாம் அவர்களைச் சாடினார்.[60]

சமய உறவுகளைப் பொறுத்தமட்டில், பல்வேறு சமயத்தவர் இணங்கி வாழ்வதே அவரது விருப்பமாக இருந்தது. ஒரு சமயத்தவர் பிற சமயத்தவருக்கு வழிபாட்டு இடங்கள் கட்டிக்கொடுப்பதையும், பல்வேறு சமயத்தவர் இணைந்து இயைந்து வாழ்வதையும் அவர் வரவேற்றுப் பேசியுள்ளார்.[61]

இறையரசின் உருவாக்கத்திற்குச் சமய அமைப்புகள் நெறிப்பட வேண்டும் என்றும் சமய நல்லிணக்கம் உருவாக வேண்டும் என்றும் யேசு கருதினார் என்பது இந்தச் செய்திகள் வாயிலாகத் தெளிவுபடுகிறது.

### 1.1.2.2.3.4. பெண் விடுதலை

இறையரசின் உருவாக்கத்திற்கு பெண் விடுதலையின் தேவையினையும் யேசுநாதர் உணர்ந்துள்ளார். பெண்கள் தீட்டு என்று ஒதுக்கப்பட்ட யூத சமுதாயத்தில் அவர் அவர்களுக்கு முக்கியத்துவம் அளித்தார். அவர்களுக்குப் போதனை மறுக்கப்பட்ட காலத்தில் அவர்களிடம் அன்பு காட்டினார்; அறிவு புகட்டினார். அவரது பன்னிரு சீடர் குழுவில் பெண்கள் இடம்பெறாவிட்டாலும் எழுபத்துரெண்டு பேரைக்கொண்டு அவர் அமைத்த இயக்கத்தில் பெண்களையும் இணைத்துக்கொண்டார். விலைமாதுகளைக் கல்லெறிந்து கொல்லும் அக்கால கட்டத்தில் அவர்களை இரக்கத்தோடு அணுகினார். எளிதாகப் பெண்களுக்கு விலக்குச் சீட்டு கொடுத்து மணமுறிவு செய்துவந்த காலத்தில் திருமணத்தின் மாறாத்தன்மையைச் சுட்டிக்காட்டினார். பெண் கற்பினை மட்டுமன்றி ஆண் கற்பினையும் வலியுறுத்தினார்.[62] இவை யாவும் பெண் விடுதலைக்கு யேசுநாதர் சிறப்பிடம் அளித்துள்ளார் என்பதற்கான சான்றுகளாகும்.

#### 1.1.2.2.3.5. அரசியல் சிந்தனைகள்

ஒடுக்கப்பட்ட மக்களின் உரிமை வாழ்வு குறித்துச் சிந்தித்த யேசு அடக்கியாளும் அரசியலை எதிர்த்தார். அதிகாரத்தை அவர் புதிய கண்ணோட்டத்தில் பார்த்தார். ஆள்வதற்கன்று, பணிபுரியவே அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது என்று புதிய மதிப்பீடு ஒன்றை உருவாக்கினார். பிறருக்குத் தன்னை அர்ப்பணிப்பதில்தான் அதிகாரம் முழுமை பெறுகிறது என்றார்.[63] அவர் அரசியல் விமர்சனங்களும் செய்தார். மானுடத்தின் நலனுக்கு மாறாகச் செயல்பட்ட ஏரோது மன்னனைக் 'குள்ளநரி' என்று விமர்சித்தார்.[64] நீதியை நிலைநாட்டுவதற்காக மனிதர்கள் போராட முன்வரவேண்டும்; அதனால் வரும் துன்பங்களை ஒரு பேறாகக் கருதவேண்டும் என்றார்.[65] தாமும் அவ்வாறு வாழ்ந்து காட்டினார். ஆளுவோரை எதிர்த்ததால் அரசியல் தண்டனையாகத்தான் அவருக்குச் சிலுவை மரணம் வழங்கப்பட்டது. யேசுநாதர் அரசியல் மாற்றத்தை விரும்பினார் என்பதற்கு இந்தச் செய்திகள் சான்றுகளாக அமைந்துள்ளன.

#### 1.1.2.2.3.6. கலாச்சார மாற்றம்

மனிதர்களின் எண்ணங்கள், பார்வைகள், நம்பிக்கைகள், வாழ்க்கை முறைகள் அனைத்தும் முற்றிலும் மாறவேண்டும் என்று யேசு விரும்பினார். மனமாற்றம் அடையுங்கள் என்பதுதான் அவரது போதனையின் மையப்பொருள். அன்பு செலுத்துதல், தொண்டு செய்தல், இரக்கம் கொள்ளுதல், நீதியை நிலைக்க வைத்தல், உழைப்பையும் உழைப்பவனையும் மதித்தல், ஆய்ந்து தெளிதல் முதலிய கலாச்சாரக் கூறுகளுக்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்தார்.[66] இத்தகைய பண்பு நிலைகளில் மானுடம் நிலைகொள்ளும்போதுதான் இறையரசு மலரும் என்று அவர் நம்பினார்.

விவிலியத்தில் இடம் பெற்றுள்ள தீர்க்கத்தரிசிகளின் கனவுகளையும் யேசுநாதரின் சிந்தனைகள் - செயல்பாடுகள் ஆகியவற்றையும் தொகுத்துப் பார்க்கும்போது அவை புதிய மானுடத்துக்கான முயற்சிகளாகவே அமைந்துள்ளன என்பது தெளிவாகத் தெரிகிறது. தீர்க்கத்தரிசிகளின் சிந்தனைகளை முழுமைப்படுத்தவும் அவற்றுக்குத் தம் காலத்திலேயே செயல்வடிவம் கொடுக்கவும் யேசு முனைந்துள்ளார். விவிலியத்தில் இடம்பெற்றுள்ள இந்தச் செய்திகள் புதிய மானுடப் பணியில் ஈடுபடுவோருக்கு உணர்வூட்டும் வகையில் அமைந்துள்ளன.

### 1.1.2.3. இஸ்லாம் எதிர்நோக்கும் புத்துலகக் கோட்பாடு

இன்று உலகின் பெரிய சமயங்களுள் ஒன்றாக வடிவெடுத்துள்ள இஸ்லாம் தொடக்க காலத்தில் ஒரு சமுதாய இயக்கமாகவே செயல்பட்டது. தம் காலத்தில் நிலவிய சமுதாயத் தீமைகளை எதிர்த்து இஸ்லாம் கடுமையாகப் போராடியது. அவலங்கள் இல்லாத புதிய உலகம் ஒன்றைப் படைப்பதையே அது தன் குறிக்கோளாகக் கொண்டிருந்தது.[67] அவ்வியக்கம் பற்றிய தெளிவான விளக்கம்,

1. இஸ்லாம் உருவான சூழ்நிலை
2. இஸ்லாம் என்னும் சொல்லின் பொருள்
3. இஸ்லாமின் சமுதாயக் கோட்பாடுகள்

என்னும் உட்பிரிவுகளின் கீழ் தரப்படுகின்றது.

#### 1.1.2.3.1. இஸ்லாம் உருவான சூழ்நிலை

கி.பி. ஆறு, ஏழாம் நூற்றாண்டை ஒட்டிய காலகட்டங்களில் அரபு மண்ணில் அவலங்கள் மிகுந்திருந்தன. 'இருண்ட பூமி' என்று குறிப்பிடும் அளவுக்குச் சமுதாயக் கொடுமைகள் அங்கு தலைதூக்கின. பொருளாதார ஏற்றத்தாழ்வு மனிதருக்கிடையில் மிகப்பெரும் பிளவை உருவாக்கியிருந்தது. பொருள் குவித்து வாழ்ந்த செல்வர்கள் அதிகாரமும் முரட்டுத்தனமும் கொண்டிருந்தனர். பொருளற்ற ஏழைகள் பெரும்பாலும் அவர்களுக்கு அடிமைகள் ஆக்கப்பட்டிருந்தனர். அடிமைகள் உடைமையாளர்களால் கொடுமைப்படுத்தப்பட்டனர்; அடிமை

வியாபாரமும் அங்கீகரிக்கப்பட்டிருந்தது. அடிமைத்தனங்கள் ஒருபுறம் இருக்க இன்னொருபுறம் மேலவர், கீழவர் என்னும் சாதிப் பிரிவினையும் மேலோங்கி நின்றது. சமயம் அங்கு மனித உறவுகளை வளர்க்கத் தவறியது. மக்கள் அன்று சிலைவழிபாடுகளில் மூழ்கிக்கிடந்தனர். ஒவ்வொரு சிலையைக் கும்பிட்டவர்களும் ஒவ்வொரு குழுவாகப் பிரிந்து தங்களுக்குள் மோதிக்கொண்டிருந்தனர். ஏறத்தாழ முந்நூற்று அறுபது குழுக்கள் அங்கு இருந்தன. சமயம் இவ்வாறு சமுதாயத்தைச் சிதைத்துச் சீர்குலைத்திருந்தது. பெண்கள் இழிபிறப்பாகக் கருதப்பட்டனர். பல்வேறு நிலைகளில் அவர்கள் கொடுமைப்படுத்தப்பட்டனர். மது, சூது, அறியாமை, கடும் வட்டி, விபச்சாரம், பாலியல் வன்முறை, கொள்ளை, கொலை முதலியவற்றால் மானுடம் அங்கு நிலைகுலைந்தது. இத்தகைய அவலங்களைக் கண்ணுற்ற முகம்மது நபி அவற்றிலிருந்து மானுடத்தை மீட்க வேண்டுமென்று முடிவு செய்தார். இது குறித்து ஹீரா (Hira) என்னும் குகையில் தனித்திருந்து நெடுங்காலம் தியானம் மேற்கொண்டார். சமுதாயத்தில் மாற்றங்களை உருவாக்கத்தக்க முடிவுகளை அவர் அங்கு எடுத்தார். தாம் எடுத்த முடிவுகள் யாவும் இறைவனால் அருளப்பட்டவை என்று முழுமையாக நம்பினார். சமுதாயத்தில் மாற்றங்களை உருவாக்குமாறு இறைவன் தமக்கு ஆணையிடுவதாக உணர்ந்தார். பின்னர் களத்துக்கு வந்து தாம் பெற்ற உணர்வுகளுக்குச் செயல் வடிவம் கொடுக்கத் தொடங்கினார். அதற்காகவே அவர் இஸ்லாம் என்னும் இயக்கத்தை உருவாக்கினார்.[68]

### 1.1.2.3.2. இஸ்லாம் என்னும் சொல்லின் பொருள்

இஸ்லாம் என்னும் சொல்லுக்குச் சாந்தி, தூய்மை, பணிவு, கீழ்ப்படிதல் என்னும் பொருள்கள் உள்ளன. இறைவனுக்குப் பணிந்து அவனது ஆணைகளுக்குக் கீழ்ப்படிந்து வாழ்தல் என்பதே இறையியல் அடிப்படையில் அதன் பொருளாகும். அத்தகைய வாழ்வின் மூலமே உலகம் உய்வு பெறமுடியும் என்பது நபிகள் நாயகத்தின் நம்பிக்கை ஆகும்.[69] இஸ்லாம் என்பதற்குச் 'சாந்தி மார்க்கம்' என்ற விளக்கமும் உண்டு. இறைவனின் ஆணைகளுக்குப் பணிந்து அதன்படி வாழ்ந்தால் மட்டுமே மானுடம் சாந்தியையும் சமாதானத்தையும் அடையமுடியும் என்பதே சாந்தி மார்க்கம் என்பதன் சாரமாகும்.[70] இறைவனின் ஆணைகளாகத் தாம் உணர்ந்தவற்றைக் குர்ஆன் வழியாகத் தெளிவுபடுத்தியுள்ளார் நபிகள். குர்ஆனுக்கு அவர் அளித்த விளக்கங்கள் ஹதீதுகள் என்னும் பெயரில் வெளிவந்துள்ளன.[71] அவை இரண்டின் வழியாகவும் இஸ்லாமின் கொள்கைகள் விளக்கம் பெறுகின்றன.

### 1.1.2.3.3. இஸ்லாமின் சமுதாயக் கோட்பாடுகள்

பொருளாதாரம், சமுதாயம், அரசியல், கலாச்சாரம் முதலியவற்றில் மனிதர்கள் மேற்கொள்ள வேண்டிய நெறிமுறைகளை இஸ்லாம் கோடிட்டுக் காட்டுகிறது. அவற்றின் வாயிலாக இஸ்லாமின் குறிக்கோள் தெளிவுபடுகிறது.

#### 1.1.2.3.3.1. பொருளியல் சிந்தனைகள்

இஸ்லாம் பசியை ஒரு சாபக்கேடாகக் கருதுகிறது. வறுமை ஒழியவேண்டும் என்பதையும் பொருளாதார முரண்பாடுகள் அகல வேண்டும் என்பதையும் அது தம் கோட்பாடுகளுள் ஒன்றாகக் கொண்டுள்ளது. ஏழைகளுக்கும் செல்வர்களுக்கும் இடையே உள்ள முரண்பாட்டை அகற்றி ஓர் உடன்பாட்டை உருவாக்க அது ஈகைக் கோட்பாட்டினை வலியுறுத்துகிறது. எவ்வளவு கொடுக்கவேண்டும் என்பதில் இஸ்லாம் தெளிவான வரையறையும் செய்துள்ளது. செல்வர்கள் ஆண்டுதோறும் தங்கள் செல்வங்களைக் கணக்குப் பார்த்து அவற்றில் இரண்டரை விழுக்காட்டினை (2 1/2%)ஏழைகளுக்கு வழங்கவேண்டும். பணம் மட்டுமன்றி தங்கம், வெள்ளி, ஒட்டகம் முதலியனவும் இதில் அடங்கும்; வங்கிகளில் உள்ள சேமிப்புத் தொகையும் இதற்கு உட்படும். இதனை இரக்கத்தினால் கொடுப்பது என்றோ, வரி செலுத்துவது என்றோ கருதக்கூடாது; கடமை என்று கருதி கட்டாயம் கொடுக்கவேண்டும். இவ்வாறு கொடுப்பதனை ஜகாத் (ZAKATH) என்கிறது இஸ்லாம்.[72]

இஸ்லாம் மாந்தர்க்குப் பின்வரும் ஐந்து கடமைகளை வலியுறுத்துகிறது:

- அல்லாவின் மீது முழு நம்பிக்கை வைத்தல்
- நாள்தோறும் ஐந்து முறை தொழுகை நடத்துதல்
- 'ஜகாத்' செலுத்துதல்
- மெக்காவுக்கு புனித யாத்திரை செல்லல்
- ரம்சான் நோன்பு இருத்தல்[73]

இவ்வைந்து கடமைகளுள் 'ஜகாத்' இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது. தொழுகை, நோன்பு முதலிய ஏனைய கடமைகளை ஒரு மாணவன் எழுதும் தொடக்க நிலைத் தேர்வுகளோடும் 'ஜகாத்' கொடுப்பதனை இறுதித் தேர்வோடும் ஒப்பிடுவர் இறையியல் அறிஞர்.[74] இந்தத் தேர்வில் வெற்றிபெற்றாலன்றி இறைவனின் அருள் பெறமுடியாது என்பதே அவர்கள் கூறவிரும்பும் செய்தியாகும். இன்னொரு கடமையாகிய 'நோன்பு' இருத்தலின் நோக்கங்களுள் 'ஏழையின் பசி உணர்தல்' என்பதும் ஒன்றாகும்.[75]

நிலம் அனைத்தும் அல்லாவுக்கு உரியது; மனிதனிடம் அது ஒப்படைக்கப்பட்டுள்ளது. ஆதலால், இல்லாதவர்களுக்கு வழங்க வேண்டியது இருப்பவர்களின் கடமை என்கிறது இஸ்லாம்.[76] உழைப்புக்குத் தகுந்த கூலி கொடுக்கப்படவேண்டும்; அந்தக் கூலி உழைப்பவனின் வியர்வை உலரும் முன்பே கொடுக்கப்படவேண்டும்; தரிசு நிலத்தை எவர் உழுது பண்படுத்துகிறாரோ அவருக்கே அது உரிமையானது என்னும் சிந்தனைகளும் இஸ்லாமில் இடம்பெற்றுள்ளன.[77]

வறுமை ஒழிய வேண்டும் என்பதில் இஸ்லாம் மிகுந்த ஆர்வம் கொண்டுள்ளது என்பதனை இந்தக் கருத்துக்கள் தெளிவுபடுத்துகின்றன.

### 1.1.2.3.3.2. சமுதாய சமத்துவம்

பொருளாதார சமத்துவத்தை வலியுறுத்தும் இஸ்லாம் சமுதாய சமத்துவத்திற்கும் மிகுந்த முக்கியத்துவம் அளிக்கிறது. அன்றைய அரபு மண்ணில் அரபி மொழி பேசிய 'அரபிகள்' அம்மொழி அறியாதோரை 'அஜமிகள்' எனக் கூறி வெறுத்து ஒதுக்கினர். அரபிகள், அஜமிகள் என்னும் இப்பிரிவினை உணர்வு ஒருவித சாதிப்பிரிவினை போல அம்மண்ணில் நிலவியது. இது தவிர அங்கு நிலவிய அடிமை முறையும் சமுதாய சமத்துவத்திற்குப் பெரிதும் தடையாக அமைந்திருந்தது. மானுடத்தின் ஒருமைப்பாட்டுக்குத் தடையாக இருக்கும் இத்தகைய பிரிவினைகள் அடியோடு ஒழியவேண்டும் என்கிறது இஸ்லாம். 'மனிதர்கள் அனைவரும் சீப்பின் பற்கள்போல் நிகரானவர்கள்' என்னும் கருத்தினை அது முன் வைக்கிறது.[78] நபிகள் நாயகம் 'பிலால்' என்னும் நீக்ரோ இளைஞனை அடிமைத்தனத்திலிருந்து மீட்டதுடன் ஆலயப்பணிக்கும் நியமித்துள்ளார். இந்த வரலாற்று நிகழ்ச்சி சகோதரத்துவ உணர்வுக்கு சிறந்த சான்றாகப் பேசப்படுகிறது.[79] இஸ்லாம் சமுதாய சமத்துவத்தில் நாட்டம் கொண்டுள்ளது என்பதனை இந்தச் செய்திகள் தெளிவுபடுத்துகின்றன.

### 1.1.2.3.3.3. சமயப் பார்வைகள்

சமயத்தின் பேரில் மனிதர்கள் பிரிந்து பிளவுபட்டுக் கிடந்தபோது அவர்களை இணைப்பது பற்றிச் சிந்தித்தது இஸ்லாம். ஒவ்வொரு சிலையைக் கும்பிட்டவர்களும் ஒவ்வொரு குழுவினராய்ச் சிதறிக்கிடந்தபோது ஓரிறைக் கோட்பாட்டை வலியுறுத்தி அவர்களை ஒருங்கிணைக்க முயன்றார் நபிகள். தமது முயற்சியில் அவர் வெற்றியும் பெற்றார். ஓரிறைக் கோட்பாட்டின் மூலம் அவர் இனக் குழுக்களை ஒன்றுபடுத்தியது வரலாற்றுச் சாதனையாகப் பேசப்படுகிறது.[80]

கடவுள் ஒருவரே என்னும் கொள்கையைக் கொண்டுள்ள இஸ்லாம் ஏனைய சமயங்களையும் அங்கீகரிக்கிறது. ஒவ்வொரு சமூகத்தினருக்கும் ஓர் இறைத்தூதர் உண்டு எனவும் அந்த இறைத்தூதர்

அனைவரும் நிகரானவர் எனவும் அது அறிவுறுத்துகிறது. பிற சமயங்களைப் பழிக்கக்கூடாது என்பதை இஸ்லாம் தன் கோட்பாடுகளுள் ஒன்றாகக் கொண்டுள்ளது.[81]

'அல்லாஹ்வைத் தவிர (மற்ற தெய்வங்களை) அழைக்கிறவர்களை நீங்கள் திட்டாதீர்கள். அப்பொழுது அறிவின்றி, வரம்பு மீறி அல்லாஹ்வை அவர்கள் திட்டுவார்கள்' என்கிறது குர்ஆன்.[82]

அல்லாஹ்வைக் கடவுள் என ஏற்றும் பிற இறைத்தூதர்களைப் பழிப்பவர் உண்மையான சமயவாதியர் அல்லர் எனவும் இஸ்லாம் தெளிவுபடுத்துகிறது.[83] மனித உறவுகள் வளர்வதற்கு சமயம் துணைநிற்க வேண்டும் என்பதையும், சமயப் பொறுமை உணர்வு உலகில் வளரவேண்டும் என்பதையும் இஸ்லாம் தன் கொள்கைகளாகக் கொண்டுள்ளது என்பது இதனால் தெளிவுபடுகிறது.

## 1.1.2.3.3.4. பெண்ணுரிமை

அன்றைய அரபு மண்ணில் பெண்களின் வாழ்க்கை துயரம் நிறைந்ததாக இருந்தது. அவர்கள் விலங்குகளைவிடவும் இழிவாக நடத்தப்பட்டனர். திருமணம் இன்பத்துக்காக மட்டுமே என்னும் கருத்து சமுதாயத்தில் நிலவியது. ஆடவர்கள் எண்ணற்ற பெண்களை மணந்தனர்; வைப்பாட்டிகளையும் வைத்துக்கொண்டனர்; பாலியல் வன்முறை, விபச்சாரம் முதலியவற்றிலும் ஈடுபட்டனர். பெண்கள் இழிபிறப்பாகக் கருதப்பட்டதால் பெண் குழந்தைகளை உயிருடன் புதைக்கும் வழக்கமும் இருந்தது; பெண் பிறந்தால் கொன்றுவிடவேண்டும் என்பது திருமண வாக்குறுதிகளுள் ஒன்றாகவும் அமைந்திருந்தது.[84] இத்தகைய அவலங்களை ஒழித்து அவர்களுக்கு வாழ்வு கொடுக்க முயன்றது இஸ்லாம். இன்பத்திலும் துன்பத்திலும் இணைந்து வாழ்வதுதான் இல்லறம் என்று புதிய மதிப்பீட்டினை அது உருவாக்கியது. மனைவியைப் பகலில் துன்புறுத்தி இரவில் மட்டும் நேசிப்பவன் மனிதன் அல்ல என்று போதித்தது. திருமணத்தை நிச்சயிக்கும் உரிமை, மணவிலக்கு பெறும் உரிமை, சொத்துரிமை போன்றவை பெண்களுக்கு வழங்கப்பட வேண்டும் என்பதையும் இஸ்லாம் தன் கொள்கைகளாகக் கொண்டுள்ளது.[85]

இஸ்லாம் இவ்வாறு பெண்ணுரிமை பற்றிப் பேசியிருப்பினும் அது அனுமதித்துள்ள பலதார மணம் மானுடச் சிந்தனையாளர்களிடையே ஒரு வினாவை எழுப்பும் வகையில் அமைந்துள்ளது. இதனை வரலாற்று உணர்வோடு பார்க்குமாறு வேண்டுகின்றனர் இஸ்லாமிய இறையியல் அறிஞர்கள். போர் முதலிய காரணங்களால் அநாதைகளும் விதவைகளும் அன்று அதிகம் பேர் இருந்தாலும், பாலியல் வன்முறைகளும் விபச்சாரமும் பெண்ணினத்தைப் பெரும் பாதிப்புக்கு உள்ளாக்கியதாலும் அவர்களுக்குப் பாதுகாப்பு வழங்குவதற்காக ஏற்பட்ட வரலாற்று நிர்ப்பந்தமே பலதார மணம் என்று அவர்கள் விளக்கம் தருகின்றனர்.[86] சமுதாயத்தில் பாதுகாப்பற்றுக் கிடக்கும் பெண்களில் நால்வரைத் திருமணம் செய்யலாம் எனவும், அந்நால்வரையும் ஒன்றுபோல் நடத்தமுடியாவிட்டால் ஒன்றோடு நிறுத்தி விடவேண்டும் எனவுமே குர்ஆன் கூறுகிறது.[87] இஸ்லாமியப் பெண்களிடையே ஏற்பட்ட பர்தா முறையும் அன்றைய சூழலில் பெண்கள் பாதுகாப்பு பெறுவதற்கான ஒரு வழிமுறைதான் என்பதனைக் குர்ஆன் வழியாக அறிய முடிகிறது.[88]

பெண்களின் உரிமையிலும் பாதுகாப்பிலும் இஸ்லாம் அக்கறை கொண்டுள்ளது என்பதனை இந்தச் செய்திகள் வழியாக அறியமுடிகிறது.

## 1.1.2.3.3.5. அரசியல் கொள்கைகள்

அனைத்து மாந்தரின் உரிமைகளுக்கும் முக்கியத்துவம் அளிக்கும் அரசியலை விரும்புகிறது இஸ்லாம். உரிமைகள் மறுக்கப்படும்போது அதனை எதிர்த்துப் போராட வேண்டும் என்பதையும் இஸ்லாம் தன் கொள்கைகளுள் ஒன்றாகக் கொண்டுள்ளது. நியாயங்களுக்காக நடைபெறும் போராட்டங்களை இஸ்லாம் 'ஜிகாத்' (Jihad)என்கிறது. இந்தப் போராட்டத்தில் நோயினாலும் முதுமையினாலும் பாதிக்கப்பட்டிருப்போரைத் தவிர ஏனையோர் அனைவரும் பங்கெடுக்க வேண்டும் என அது ஆணையிடுகிறது.[89]

இன, மொழி, தேசிய வேறுபாடுகள் இல்லாத உலக மானுடம் உருவாக வேண்டும் எனவும் இஸ்லாம் விழைகிறது. மனுக்குலம் ஒரே ஆணிடமிருந்தும் பெண்ணிடமிருந்தும் படைக்கப்பட்டது; இன்று அது நாடுகளாகவும் இனங்களாகவும் பல்கிப்பெருகியுள்ளது. ஆதலால், ஒரு நாட்டவர் பிற நாட்டவரையும் ஒரு இனத்தார் பிற இனத்தாரையும் அங்கீகரிக்க வேண்டும் எனவும் குர்ஆன் கூறுகிறது. வேலிகள் இல்லாத உலக மானுடக் கொள்கையை இஸ்லாம் 'தௌகீத்' (Tawhid) என்கிறது.[30]

இஸ்லாம் மனித உரிமைகளுக்கும் உலக ஒருமைப்பாட்டுக்கும் முக்கியத்துவம் அளிக்கிறது என்பதனை இந்தச் செய்திகளால் அறியமுடிகிறது.

### 1.1.2.3.3.6. கலாச்சார மாற்றம்

மாந்தரின் எண்ணங்கள், உணர்வுகள், வாழ்க்கை முறைகள் யாவும் முற்றிலும் மாற்றியமைக்கப்பட வேண்டும் என இஸ்லாம் விரும்புகிறது. எளிய வாழ்க்கை, உழைப்பு, நேர்மை, கட்டுப்பாடு, அறிவுபெறுதல், இயற்கையைப் பேணுதல் முதலிய கலாச்சாரக் கூறுகளுக்கு அது மிகுந்த முக்கியத்துவம் அளிக்கிறது.[31]

வட்டி வாங்குவதைக் கண்டிக்கும் இஸ்லாம், வட்டி வேறு வியாபாரம் வேறு என்பதைத் தெளிவுபடுத்துகிறது;[32] மது, சூது முதலியவற்றைக் கண்டிக்கிறது.[33]

ஆண், பெண் இருபாலரும் கற்பதை விரும்பும் இஸ்லாம், அறிவு சீனாவில் இருந்தாலும் தேடிக்கொண்டுவர ஆணையிடுகிறது; அறிவைத் தேடுவது தொழுகையைவிடச் சிறந்த நோன்பு எனவும் கூறுகிறது.[34]

மனிதனின் தவறுகளால் தான் இயற்கையும் சமுதாயமும் கெட்டுப்போயின எனக் கூறும் இஸ்லாம், மனிதன் நெறிப்படாவிட்டால் மானுடத்துக்கு இனி மீட்பு இல்லை என எச்சரிக்கிறது.[35]

மானுடம் சாந்தியையும் சமாதானத்தையும் அடைய இத்தகைய கலாச்சார மாற்றங்களும் இன்றியமையாதது என இஸ்லாம் உணர்த்துகிறது.

இஸ்லாம் வலியுறுத்தும் நெறிமுறைகளைத் தொகுத்துப் பார்க்கும்போது, புதிய சமுதாயம் ஒன்றைப் படைப்பதற்கான கருத்தோட்டங்களாகவே அவை தென்படுகின்றன. இஸ்லாம் எதிர்நோக்கும் புத்துலகுக்குக் கிருதயுகம், இறையரசு என்பன போல் பெயர் எதுவும் சுட்டப்படவில்லை. இஸ்லாம் என்பதற்குச் சாந்தி மார்க்கம் என்ற விளக்கம் இருப்பதாலும் சாந்தியும் சமாதானமுமே இஸ்லாமின் குறிக்கோள் என்பதாலும், அதற்குப் பெயர் ஒன்று சுட்டுவதாயின் 'சாந்தி உலகம்' எனச் சுட்டலாம். புதிய மானுடப் பணிகளில் ஈடுபடுவோருக்கு இந்தச் சாந்தி உலகச் சிந்தனைகள் துணை நிற்பனவாகவே அமைந்துள்ளன.

### 1.1.2.4. மார்க்சியச் சிந்தனையாளர்கள் சுட்டும் பொதுவுடைமைக் கோட்பாடு

*ஜெர்மானிய அறிஞரான காரல் மார்க்சும் ( 1818 - 1883 ) இங்கிலாந்து அறிஞரான பிரெடரிக் எங்கெல்சும் ( 1820 - 1895 ) இணைந்து உருவாக்கிய சமூகவியல் கருத்துக்களின் தொகுதியே மார்க்சியம் ஆகும். தொடக்க காலத்தில் மனிதர்கள் வாழ்ந்த வாழ்க்கை முறை, மானுடத்தின் படிப்படியான வளர்ச்சிநிலை, எதிர்காலத்தில் அமையவிருக்கும் மானுடத்தின் தன்மை முதலியன குறித்து அவர்கள் அறிவியல் முறையில் ஆய்வு செய்து பல்வேறு கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். எதிர்காலத்தில் சுரண்டல் இல்லாத - வர்க்க பேதங்கள் இல்லாத - எல்லார்க்கும் எல்லாம் கிட்டுகின்ற சமுதாய வாழ்வு மலரும் என ஆய்வு அடிப்படையில் தெளிவுபடுத்தியுள்ளனர். அந்தப் புது வாழ்வினையே அவர்கள் பொதுவுடைமை எனக் குறிப்பிடுகின்றனர். அவை பற்றிய விளக்கங்கள்,*

1. மார்க்சியம் உருவான சூழ்நிலை

2. முதலாளித்துவத்தின் இயல்புகள் குறித்து மார்க்சியத்தின் மதிப்பீடுகள்

3. மார்க்சியத்தின் அடிப்படைகள்

4. பொதுவுடைமையின் இயல்புகள்

என்னும் தலைப்புகளின் கீழ் வகைப்படுத்தித் தரப்படுகின்றன.

### 1.1.2.4.1. மார்க்சியம் உருவான சூழ்நிலை

இடைக்கால ஐரோப்பாவில் தொழிற்புரட்சியின் பயனால் ஏற்பட்ட உற்பத்திப் பெருக்கத்தாலும் புதிய கடல்வழிகள் கண்டுபிடிக்கப்பட்டு சந்தைகள் விரிவாக்கப்பட்டதாலும் முதலாளித்துவம் தலைதூக்கி வளர்ந்தது. ஆனால் அது லாபம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிருந்தது. முதலாளிகள் தொழிலாளிகளுக்கு மிகக்குறைந்த கூலியைக் கொடுத்து மிக அதிகமான உழைப்பை வாங்கினர். முதலாளிகளின் செல்வச் செழிப்பிற்காகத் தொழிலாளர்கள் கசக்கிப் பிழியப்பட்டனர். இதன் விளைவாக முதலாளி - தொழிலாளி முரண்பாடுகள் தீவிரம் அடைந்தன. தங்களது அவலங்களை எண்ணிய தொழிலாளர்கள் சினமுற்றனர். ஆதலால், முதலாளிகளுக்கு எதிரான போராட்டங்களை நடத்தினர்; புதிதாக வந்த இயந்திரங்களை அடித்து உடைத்தனர்; ஆலைகளைத் தீயிட்டுக் கொளுத்தினர். ஆனால், திட்டமும் தெளிவும் இல்லாமல் நடத்தப்பட்டதால் அந்தப் போராட்டங்கள் தோல்விகளையே தழுவின. ஆதலால், முதலாளித்துவத்தை எதிர்ப்பதற்குத் தெளிவான ஒரு தத்துவம் தேவைப்பட்டது. இந்தச் சூழலில்தான் மார்க்ஸ், எங்கெல்ஸ் ஆகியோர் தங்கள் சிந்தனைகளை எழுப்பினர்.[96] இதுவே மார்க்சியம் உருவான வரலாறாகும்.

### 1.1.2.4.2. முதலாளித்துவத்தின் இயல்புகள் குறித்து மார்க்சியத்தின் மதிப்பீடுகள்

முதலாளித்துவத்தின் உற்பத்திச் சாதனைகளை மார்க்சியம் மதிக்கிறது. ஆனால், பணத்தின் மேலாதிக்கத்தால் மனித உறவுகள் சீர்குலைந்து கிடப்பதையும் மனித மாண்புகள் புறக்கணிக்கப்படுவதையும் அது சுட்டிக்காட்டுகிறது. முதலாளித்துவத்தின் இழிநிலை இயல்புகளாக மார்க்சியம் சுட்டிக்காட்டுவனவற்றைப் பின்வருமாறு தொகுக்கலாம்:

- சமுதாயத்தில் எங்கும் எதிலும் லாபமே குறிக்கோளாக உள்ளது; மனித மாண்புகள் மதிப்பிழக்கின்றன.
- உண்மையான சுதந்திரம் இல்லை. பொருட்களை வாங்கவும் விற்கவுமான வணிக சுதந்திரம் ஒன்றே உள்ளது.
- மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், சமயக் குருக்கள், கலைஞர்கள், அறிவியல் அறிஞர்கள் முதலானோர் கூலிக்கு உழைப்பவர்களாக ஆக்கப்படுகின்றனர்.
- குடும்ப உறவுகள் பொருளாதார உறவுகளாகச் சிறுமை அடைகின்றன; பெண்கள் குழந்தைபெறும் இயந்திரங்களாகக் கருதப்படுகின்றனர்; பொருளற்ற பெண்கள் விபச்சாரத்திற்குத் தூண்டப்படுகின்றனர்.
- உழைப்பு சுவையற்றதாகிறது. தொழிலாளர்கள் இயந்திரத்தின் துணை உறுப்புபோல் ஆக்கப்படுகின்றனர்.
- சொத்துக்கள் சிலரிடம் குவிவதால் அதிகாரமும் சிலரிடமே குவிகிறது.
- கிராமங்கள் நகரங்களுக்கு அடிமையாகும் சூழ்நிலை உருவாகிறது.[97]

பொதுவுடைமைச் சமுதாயத்தின் உருவாக்கத்தில்தான் இத்தகைய இழிநிலைகளை மாற்ற முடியும் என்கிறது மார்க்சியம்.

### 1.1.2.4.3. மார்க்சியத்தின் அடிப்படைகள்

மார்க்சியம் அறிவியல் முறையிலான ஆய்வு என்பதனால் அதன் அணுகுமுறைகள் பிறகோட்பாடுகளிலிருந்து வேறுபடுகின்றன.

- பெருள் முதல்வாதம்
- அரசியல் பொருளாதாரம்
- விஞ்ஞான சோசலிசம்

என்னும் மூன்று அடிப்படைகளில் அது சமுதாயத்தை ஆய்வு செய்கிறது.

### 1.1.2.4.3.1. பொருள் முதல்வாதம்

பிரபஞ்சத்தின் இயக்கத்திற்கு எது அடிப்படையாக உள்ளது என்பதை விளக்குவதில் கருத்து முதல்வாதம், பொருள் முதல்வாதம் என இருவேறுபட்ட தத்துவங்கள் உள்ளன.[98] மார்க்சியச் சிந்தனையாளர்கள் கருத்து முதல்வாதிகளின் பிரபஞ்சக் கோட்பாட்டை மறுத்து பொருள் முதல்வாதத்தின் அடிப்படையில் சமுதாயத்தை ஆய்வு செய்கின்றனர். அதன் அடிப்படையில் பல்வேறு சிந்தனைகளை எழுப்புகின்றனர்.

பொருள் முதல்வாதத்தில் இயக்கவியல் பொருள் முதல்வாதம், வரலாற்றுப் பொருள் முதல்வாதம் என இரு கூறுகள் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

### 1.1.2.4.3.1.1. இயக்கவியல் பொருள் முதல்வாதம்

இயற்கையில் எல்லாப் பொருட்களும் இடையறாது இயங்கிக் கொண்டிருக்கின்றன. அந்த இயக்கத்தால் அவற்றில் மாற்றங்கள் நிகழ்கின்றன. அந்த மாற்றங்கள் வளர்ச்சிக்கு அடிப்படையாக உள்ளன. இயற்கையைப் போலவே சமுதாயமும் பல படி நிலைகளைக் கடந்து வளர்ச்சிபெற்று வருகிறது. சமுதாயத்திலும் மாற்றங்கள் தவிர்க்க முடியாதவை. இயற்கையின் வளர்ச்சி நிலைகளை ஆய்ந்து அறிய முடிவதுபோல சமுதாயத்தின் வளர்ச்சி நிலைகளையும் ஆய்வு செய்து அறிய முடியும் என்கிறது இயக்கவியல் பொருள் முதல்வாதம்.[99]

சமுதாயத்தின் நேற்றைய - இன்றைய நிலைகளை ஆய்வு செய்து அதன் மூலம் நாளைய நிலையினையும் ஆய்ந்தறிய முடியும் என்பதே இயக்கவியல் தத்துவத்தின் சாரமாகும்.

### 1.1.2.4.3.1.2. வரலாற்றுப் பொருள் முதல்வாதம்[100]

வரலாற்றுப் பொருள் முதல்வாதம் மானுடத்தின் வரலாற்றை வர்க்கப் போராட்டங்களின் வரலாறாகப் பார்க்கிறது.

சமுதாயத்தில் நிலவும் உற்பத்திமுறைதான் வரலாற்றை இயக்கும் அடிப்படைச் சக்தி; உற்பத்திமுறையின் அடிப்படையில் சமுதாயத்தில் இருவேறுபட்ட வர்க்கங்கள் இருந்துவருகின்றன; அந்த முரண்பட்ட சக்திகள் மோதுவதன் விளைவாகவே வரலாறு உருவாகிறது என்கிறது மார்க்சியம்.

உற்பத்திமுறையின் அடிப்படையில் எழுந்துள்ளதும் எழவிருப்பதுமான வரலாற்றுக் கட்டங்களை மார்க்சியம் பின்வருமாறு வகைப்படுத்துகிறது:

- ஆதிப் பொதுவுடைமைச் சமுதாயம்
- ஆண்டான் - அடிமைச் சமுதாயம்
- நிலப்பிரபுத்துவச் சமுதாயம்
- முதலாளித்துவச் சமுதாயம்
- பொதுவுடைமைச் சமுதாயம்.

ஆதிப் பொதுவுடைமையில் வர்க்கங்கள் எதுவும் இல்லை; சேர்ந்து வாழுதலும் பகிர்ந்து உண்ணுதலும் அன்று நடைமுறையில் இருந்தன; அதற்குப் பிறகு உள்ள வரலாறு அனைத்தும் வர்க்கப் போராட்டங்களின் வரலாறேயாகும் என்கிறது மார்க்சியம்.[101]

முதலாளித்துவத்தின் உச்சக்கட்டத்தில்தான் ஏகாதிபத்தியம் உருவாகும்; அந்த ஏகாதிபத்தியம்தான் முதலாளித்துவத்தின் இறுதிக்கட்டம் ஆகும். அதற்குப் பின் வர்க்கங்கள் இல்லாத சமத்துவ சமுதாயம் மலரும் என நம்பிக்கை அளிக்கிறது மார்க்சியம். ஏகாதிபத்தியம் வளர்ந்து, உச்சநிலையை அடைந்து பின்னர் அழிவதனை உடம்பில் முளைத்த ஒரு பரு வளர்ந்து உடைந்து அழிவதனோடு ஒப்பிட்டுச் சொல்வர் மார்க்சியச் சிந்தனையாளர்.[102] சுருக்கமாகக் கூறுவதானால் இயக்கவியல் மற்றும் வரலாற்றுப் பொருள் முதல்வாத ஆய்வுகள் பொதுவுடைமைச் சமுதாயத்தை உருவாக்க முடியும் என்னும் நம்பிக்கையை வழங்குகின்றன.

## 1.1.2.4.3.2. அரசியல் பொருளாதாரம்[103]

சுரண்டல்தான் ஏற்றத்தாழ்வுக்கான காரணம் என்பதைச் சுட்டுவதுடன் அந்தச் சுரண்டல் எவ்வாறு நடைபெறுகிறது என்பதையும் அரசியல் பொருளாதார ஆய்வு விளக்குகிறது.

முதலாளித்துவ சமுதாயத்தில் உற்பத்திக்குத் தேவையான இயந்திரங்கள், கட்டடங்கள் முதலான அனைத்தும் தனி நபர்களின் உடைமைகளாகவே உள்ளன. உழைப்பவர்களிடம் அவை இல்லாமையால் அவர்கள் தங்கள் உழைப்புச் சக்தியை [labour power] முதலாளித்துவத் தொழில் நிறுவனங்களில் விற்பனை செய்யவேண்டிய கட்டாய நிலை உருவாகிறது. அங்கு தொழிலாளர்களுக்குக் கிடைக்கும் கூலியின் அளவு, அவர்கள் வழங்கும் உழைப்பின் அளவைவிடக் குறைவாக உள்ளது. கிடைக்கும் கூலிக்கான உழைப்பை அவசிய உழைப்பு என்றும் கூடுதலாக வழங்கும் உழைப்பை மிகை உழைப்பு என்றும் அரசியல் பொருளாதார ஆய்வு வகைப்படுத்துகிறது. அந்த மிகை உழைப்புதான் முதலாளிக்கு லாபமாகவும் மூலதனமாகவும் வளர்கிறது என மார்க்சியம் அறிவிக்கிறது. இந்த மிகைமதிப்புத் தத்துவம் மார்க்சியப் பொருளாதார ஆய்வின் மூலைக் கல்லாகக் கருதப்படுகிறது.[104]

தனியுடைமை ஒழிக்கப்பட்டால்தான் உலகுக்கும் உழைப்பவனுக்கும் மீட்பு உண்டு என்பதே அரசியல் பொருளாதார ஆய்வு உணர்த்தும் செய்தியாகும்.

## 1.1.2.4.3.3. விஞ்ஞான சோசலிசம்[105]

பொதுவுடைமையை உருவாக்குவதற்கான வழிமுறைகளை விஞ்ஞான சோசலிச ஆய்வு விளக்குகிறது.

வர்க்கப் போராட்டத்தின்[106] மூலம் முதலாளி வர்க்கத்தை ஆட்சியிலிருந்து அகற்றிவிட்டு பாட்டாளி வர்க்கத்தின் ஆட்சியை ஏற்படுத்தினால்தான் பொதுவுடைமைக்கான பணிகளைத் தொடங்க முடியும் என மார்க்சியம் அறிவிக்கிறது.

முதலாளித்துவத்துக்கு எதிரான வர்க்கப் போராட்டத்துக்குப் பாட்டாளி வர்க்கம்தான் தலைமை தாங்க முடியும் எனவும் வர்க்கப் போராட்டத்தை முன்னெடுத்துச் செல்ல பாட்டாளி வர்க்கத்துக்குப் புரட்சிகரமான அரசியல் இயக்கம் தேவை எனவும் மார்க்சியம் கூறுகிறது.

பாட்டாளி வர்க்கத்தின் விடுதலையில்தான் கலைஞர்கள், அறிவியல் அறிஞர்கள், அரசு ஊழியர்கள் போன்ற நடுத்தர வர்க்கத்தினரின் விடுதலையும் உள்ளதால் இவர்கள் பாட்டாளி வர்க்கத்துடன் இணைந்து நிற்கவேண்டுமென்று மார்க்சியம் வேண்டுகோள் விடுக்கிறது.

வர்க்கப் போராட்டத்தின் பாதையை இவ்வாறு வகுத்துக் கொடுக்கும் மார்க்சியம், பாட்டாளி வர்க்கம் ஆட்சியைக் கைப்பற்றிய பிறகு நடைபெறும் மூன்று கட்ட வளர்ச்சி நிலைகளில் மூன்றாவது கட்டத்தில்தான் பொதுவுடைமை மலரும் என அறிவிக்கிறது. வளர்ச்சி நிலைகளின் மூன்று காலகட்டங்களை,

- மாறும் காலகட்டம்
- சோசலிசம் (சமவுடைமை)
- கம்யூனிசம் (பொதுவுடைமை)

என்று அது வகைப்படுத்துகிறது.[107]

### 1.1.2.4.3.3.1. மாறும் காலகட்டம்

ஆட்சி மாற்றம்தான் மாறும் காலகட்டத்தின் தொடக்கம் ஆகும். ஆட்சியைக் கைப்பற்றியதும் பாட்டாளி வர்க்கம் மேற்கொள்ளவேண்டிய பணிகளை மார்க்சியம் பின்வருமாறு தொகுத்துக் கூறுகிறது:

- நிலம் மற்றும் இயந்திரங்கள் போன்ற உற்பத்திக் காரணிகள் அனைத்தும் சமுதாய உடைமை ஆக்கப்பட வேண்டும்.
- வங்கிகள், போக்குவரத்து, தகவல் தொடர்பு முதலியன நாட்டுடைமை ஆக்கப்பட வேண்டும்.
- ஆலைகளையும் உற்பத்திக் கருவிகளையும் விரிவாக்க வேண்டும்; தரிசு நிலங்களைப் பயிர் நிலங்கள் ஆக்க வேண்டும்.
- உழைப்பினை அனைவருக்கும் உரிய கடமை ஆக்க வேண்டும்.
- விவசாயத்தைத் தொழில் துறையுடன் இணைக்க வேண்டும்; கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் இடையே உள்ள வேறுபாடுகளை அகற்ற வேண்டும்.
- அனைத்துக் குழந்தைகளுக்கும் பொதுப் பள்ளிக்கூடங்களில் இலவசக் கல்வி அளிக்க வேண்டும்; கல்வியைப் பொருள் உற்பத்தியுடன் இணைக்க வேண்டும்.[108]

மாறும் காலகட்டத்தில் இத்தகைய பணிகள் முறையாக நிறைவேற்றப்பட்டால் சோசலிசம் என்னும் இலக்கினை எட்ட முடியும் என்பதே இந்தச் செய்திகளின் சாரமாகும்.

### 1.1.2.4.3.3.2. சோசலிசம்

சோசலிசம் என்பது பொதுவுடைமையை நோக்கிய மூன்று கட்ட வளர்ச்சி நிலைகளில் இரண்டாவது கட்டமாகும். உற்பத்திக் காரணிகள் சமுதாய உடைமை ஆக்கப்படுவதால் உழைப்பு சக்தி விற்பனைப் பொருளாக இருந்த நிலை இங்கு மாற்றப்படும்; வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிக்கப்படும். உற்பத்தியின் நோக்கம் லாபம் என்ற நிலைமாறி மாந்தர் தம் தேவைகளை நிறைவு செய்தல் என்னும் நிலை உருவாகும். ஆயினும் இந்நிலையில் முழு சமத்துவம் நிலவாது எனவும் உயர்வு தாழ்வுகள் இருக்கத்தான் செய்யும் எனவும் மார்க்சிய ஆய்வு குறிப்பிடுகிறது.

'சக்திக்குத் தகுந்த உழைப்பு

உழைப்புக்குத் தகுந்த ஊதியம்'

என்பதுதான் சோசலிச வாய்ப்பாடு என்று அது விளக்கிச் செல்கிறது.[109] இவ்வாறு சோசலிசத்தின் இயல்புகளை மார்க்சியம் தெளிவுபடுத்துகிறது.

### 1.1.2.4.3.3.3. கம்யூனிசம்

கம்யூனிசம் என்பது சோசலிசத்தின் முதிர்ந்த கட்டம் என்று மார்க்சியம் அறிவிக்கிறது. இந்த இலக்கினை மானுடம் எட்டவேண்டுமாயின் பொருளாதார அமைப்பின் மாற்றங்களுக்கேற்ப கலாச்சாரக் கூறுகளிலும் மாற்றங்கள் நிகழவேண்டும் என்பர் மார்க்சியச் சிந்தனையாளர்.

முறையான பொருளாதார - கலாச்சார மாற்றங்களால் மெல்ல மெல்ல மானுடம் இந்த இலக்கு நோக்கி இயங்கும் என்பதே மார்க்சிய ஆய்வின் முடிவாகும். முழுமையான பொதுவுடைமை மலரும் போது சமுதாயம் எவ்வாறு இருக்கும் என்பதையும் மார்க்சிய ஆய்வு தெளிவுபடுத்துகிறது. பொதுவுடைமையின் இயல்புகளாக அது கூறும் கருத்துக்களைப் பின்வருமாறு தொகுக்கலாம்:

- அறிவியலும் தொழில்நுட்பமும் பெரும் அளவில் வளர்ந்து உற்பத்திப் பொருட்கள் குவியும். அதன் விளைவாக,

  'சக்திக்குத் தகுந்த உழைப்பு

  தேவைக்குத் தகுந்த பங்கீடு'

  என்னும் இலக்கினை மானுடம் எட்டும்.

- உழைப்பு நிர்ப்பந்தமாக இருக்காது; மனிதர்கள் அதனைத் தங்கள் தேவையாக உணர்ந்து இயல்பாக ஏற்றுக்கொள்வர்.
- அனைத்துப் பிரிவினைகளும் ஒழிந்து சமுதாய சமத்துவம் நிலவும்.
- சுய உணர்வும் சுய கட்டுப்பாடும் நிலவும். சமுதாய உணர்வும் சமுதாய ஒழுக்கமும் உருவாகும். ஆதலால், நீதி மன்றங்களுக்கும் சிறைச்சாலைகளுக்கும் தேவை இருக்காது.
- மனிதர் பல துறைகளிலும் வளர்ச்சி பெறுவர். ஒவ்வொருவர் திறமையும் சமுதாயம் முழுவதன் நலன்களுக்காகப் பயன்படுத்தப்படும்.
- அனைவரும் தங்கள் கடமைகளை உணர்ந்து செயல்படுவதால் மக்களை வழிநடத்த அரசின் தேவை இருக்காது. காலப்போக்கில் அரசு வாடி உதிரும். ஆனால், உற்பத்தியையும் பங்கீடுகளையும் ஒழுங்குபடுத்த சமுதாய நிறுவனங்கள் இருக்கும்.
- உலகம் முழுதும் பொதுவுடைமை மலரும்போது போர்கள் ஒழியும்.[110]

மார்க்சியம் கடந்த காலத்தை ஆய்வு செய்து நிகழ் காலத்தைக் கணித்து நாளை பற்றிய நம்பிக்கையினையும் அளித்துள்ளது. அன்பினாலும் ஆர்வத்தினாலும் கூறப்பட்ட சமத்துவச் சிந்தனைகளை ஆய்வுக்கு உட்படுத்தி, அவை நடைமுறைப்படுத்த முடிவனவே என நிறுவியுள்ளது. சமுதாய இயக்கங்கள் அறிவியல் சார்ந்த ஆய்வுகளை மேற்கொள்ளவும் சமயங்கள்தோறும் விடுதலை இறையியல் தோன்றவும் மார்க்சியம் களம் அமைத்துக் கொடுத்துள்ளது. இவ்வாறு புதிய மானுடத்தின் அமைவுக்கு மார்க்சியம் தன் பங்களிப்பைச் செய்துள்ளது.

### 1.1.2.5. காந்தி கனவு கண்ட ராமராஜியக் கோட்பாடு

இந்திய விடுதலைப் போராட்டத்தை முன்னின்று நடத்திய காந்தி, விடுதலை பெற்ற இந்தியா எவ்வாறு இருக்கவேண்டுமென்று சிந்தனை செய்தார். இந்திய நாட்டின் பிரச்சினைகளையும் இந்திய நாட்டு மக்கள் வாழ்வில் அடைகின்ற துன்பங்களையும் அனுபவ வாயிலாக உணர்ந்த காந்தி, இந்தியாவில் அவலங்கள் இல்லாத புதுவாழ்வு மலர வேண்டும் என விழைந்தார். தாம் விரும்பிய அந்தப் புதிய சமுதாயத்திற்குத்தான் அவர் 'ராமராஜியம்' என்று பெயர் சூட்டினார். ராமராஜியக் கோட்பாடு பற்றிய தெளிவான விளக்கம்,

1. ராமராஜியக் கோட்பாட்டின் வரலாற்றுப் பின்னணி
2. ராமராஜியம் - பெயர் விளக்கம்
3. ராமராஜியத்தின் சமுதாயக் கோட்பாடுகள்

என்னும் தலைப்புகளின் கீழ் தரப்படுகின்றது.

### 1.1.2.5.1. ராமராஜியக் கோட்பாட்டின் வரலாற்றுப் பின்னணி

காந்தியடிகள் உலகின் பிறநாட்டுச் சமயங்களையும் அரசியல் கோட்பாடுகளையும் ஆழ்ந்து பயின்றிருந்தாலும் அவரது சிந்தனைகள் இந்திய நாட்டின் மரபுப் பின்னணியில்தான் அமைந்திருந்தன. கிருதயுகக் கோட்பாடு போல 'ராமனும் ராமராஜியமும்' என்ற ஒரு கோட்பாடும் இந்திய மக்களின் உள்ளத்தில் ஆழப்பதிந்திருப்பதை அவர் உணர்ந்துள்ளார். தாம் கனவு காணும் புதிய சமுதாயத்திற்கு மக்களுக்கு அறிமுகமான பெயர் பொருத்தமாக இருக்கும் எனக் கருதி 'ராமராஜியம்' என்ற பெயரைத் தேர்வு செய்தார். தம் எதிர்காலக் கனவுகளையெல்லாம் அவர் அதன்மேல் இட்டுக் கூறினார். தமது கடிதங்களிலும் கட்டுரைகளிலும் அதுகுறித்து அவர் எழுதினார்.

### 1.1.2.5.2. ராமராஜியம் - பெயர் விளக்கம்

ராமன் என்ற பெயர் இந்து சமயச் சார்புடைய பெயராதலால் காந்தி கூறும் ராமராஜியம் இந்துக்களின் ஆட்சியாக இருக்குமோ என்னும் ஐயம் இஸ்லாமியர் உள்ளிட்ட பலரின் நெஞ்சங்களிலும் எழுந்தது. அதனை உணர்ந்த காந்தி, தாம் ராமராஜியம் என்று குறிப்பிடுவது இந்துக்களின் ஆட்சி அல்ல; அது நீதியின் ஆட்சி என்று கூறினார். மண்ணில் சொர்க்கம் அமைய வேண்டும் என்பதையே தாம் இப்படிக் கூறுவதாக விளக்கினார். அதன் பிறகு அவர் புதிய சமுதாயம் பற்றி எழுதும்போது 'ராமராஜியம்' என்னும் பெயரை மட்டுமன்றி 'கிராம சுயராஜியம்' என்னும் பெயரையும் பயன்படுத்தி வந்தார்.[111] ராமராஜியம் என்பது சமயச் சார்புடைய ஆட்சியல்ல என்பதை அவர் இவ்வாறு மக்களுக்குத் தெளிவுபடுத்தினார்.

### 1.1.2.5.3. ராமராஜியத்தின் சமுதாயக் கோட்பாடுகள்

ராமராஜியத்தின் அமைவுக்குப் பொருளாதாரம், சமுதாயம், அரசியல், கலாச்சாரம் முதலியவற்றில் மக்கள் மேற்கொள்ளவேண்டிய நெறிமுறைகளைக் காந்தியடிகள் சுட்டிக்காட்டியுள்ளார். அவற்றின் வழியாக ராமராஜியத்தின் சமுதாயக் கோட்பாடுகள் தெளிவுபெறுகின்றன.

#### 1.1.2.5.3.1. பொருளியல் சிந்தனைகள்

வறுமை ஒழியவேண்டும் என்பதை ராமராஜியம் தன் கோட்பாடுகளுள் ஒன்றாகக் கொண்டுள்ளது. ஏற்றத்தாழ்வுகள் அகல வேண்டும்; வாழ்க்கைத் தேவைகள் அனைவருக்கும் ஒன்றுபோல நிறைவேற்றப்பட வேண்டும்; அப்போதுதான் ராமராஜியம் உருவாக முடியும் என்றார் காந்தி. பொருளாதார சமத்துவத்திற்கு அவர் தர்மகர்த்தாப் பொதுவுடைமை முறையை வலியுறுத்தினார். சொத்துக்கள் சமுதாய உடைமை ஆக்கப்பட வேண்டும் என்னும் மார்க்சியச் சிந்தனை அவருக்கு உடன்பாடில்லை. திறமை மிக்கவர்களிடம் கூடுதல் சொத்து சேர்வதைத் தவிர்க்க முடியாது என உணர்ந்த காந்தி, அவர்களிடமிருந்து அவற்றைப் பறிக்க முயன்றால் அது சமுதாயத்திற்குக் கேடு விளைவிக்கும் என்று கருத்து தெரிவித்தார். அதே வேளையில், கூடுதல் சொத்தும் பொருளும் வைத்திருப்போர் தங்களது தேவைக்குப் போக எஞ்சியவற்றைச் சமுதாயத்தின் நலனுக்காகப் பயன்படுத்தும் தர்மகர்த்தாக்களாக நடந்துகொள்ள வேண்டுமென்று அறிவுறுத்தினார். செல்வம் படைத்தவர்கள் அவ்வாறு நடந்துகொள்ளாவிட்டால் அகிம்சை வழியிலான ஒத்துழையாமை மூலம் அவர்களை நெறிப்படுத்த முடியும் என்று நம்பிக்கை அளித்தார்.[112] 'இந்தப் பூமி அனைவருக்கும் பொதுவானது என்பதே முன்னோர்கள் நமக்கு வழங்கிச் சென்ற தத்துவம்; அதனை நிறைவேற்றுவதே நம் கடமை' என்று மரபின் வழி நின்றும் வேண்டுகோள் விடுத்தார்.[113] ராமராஜியத்தின் பொருளியல் சிந்தனைகளை இந்தச் செய்திகள் தெளிவுபடுத்துகின்றன.

#### 1.1.2.5.3.2. சாதிப் பிரச்சினை

ராமராஜியம் சாதி ஒடுக்குமுறைகள் இல்லாத சமுதாயத்தை விரும்புகிறது. காந்தியின் காலத்தில் சாதிக்கொடுமை தலைவிரித்தாடியது. அந்தக் கொடுமைகளைத் தம் கண்களால் கண்ட

காந்தி, ராமராஜியத்தில் சாதிக்கொடுமைகள் இருக்காது என்றார். ஆலயங்களில் அனைவரும் வழிபடலாம்; பொதுக் கிணறுகளில் அனைவரும் நீர் எடுக்கலாம் எனத் தெளிவுபடுத்தினார்.[114] ஹரிஜனங்கள் கடவுளின் மக்கள்; அவர்களைத் தீண்டாமைக்கு உட்படுத்தியவர்கள் கொடியவர்கள் என்று கருத்து தெரிவித்தார். தீண்டாமை என்னும் சாபக்கேட்டை ஒழிக்க அனைவரும் முன்னின்று பணியாற்ற வேண்டுமென்று வேண்டுகோள் விடுத்தார்.[115] சாதிக்கொடுமைகள் ஒழிந்த நிலையில்தான் ராமராஜியம் உருவாக முடியும் என்பது இந்தக் கருத்துக்கள் வழியாகத் தெளிவுபடுகிறது.

### 1.1.2.5.3.3. சமய அணுகுமுறைகள்

இந்திய மண்ணில் சமயங்களின் செல்வாக்கை உணர்ந்த காந்தி அவற்றை நெறிப்படுத்த முனைந்தார். சமயம் சமுதாயத்தைவிட்டு ஒதுங்கக்கூடாது எனவும் மக்கள் துயர் தீர்க்கும் பணிதான் உண்மையான சமயப்பணி எனவும் கூறிவந்தார்.[116]

ராமராஜியத்தின் உருவாக்கத்திற்கு சமய நல்லிணக்கம் தேவை என்பதையும் காந்தி உணர்ந்திருந்தார். தம் காலத்தில் நடந்த மதக்கலவரங்களைக் கண்டு மனம் நொந்த காந்தி, சமய நல்லிணக்கத்திற்காகப் பெரிதும் உழைத்தார்; சமயப் பொறுமை பற்றியும் சமயப் பொதுமை பற்றியும் விரிவாகப் பேசிவந்தார்.

பரம்பொருள் ஒன்றுதான்; மக்களின் மன அமைவுகளும் அவர்கள் வாழும் பகுதிகளின் தட்பவெட்ப நிலைகளும் மாறுபட்டிருப்பதால்தான் பல்வேறு சமயங்கள் உலகில் உருவாகியுள்ளன. ஒரே இலக்கை நோக்கிச் செல்லும் பல்வேறு சாலைகள்தாம் மதங்கள். ஒரே குறியிடத்தை அடைவதென்றால் வேறுவேறு வழிகளில் பயணம் செய்வதில் தவறு இல்லை. மனிதர்களை இணைப்பதுதான் சமயங்களின் நோக்கமேயன்றி, பிரிப்பதல்ல. கடவுளிடம் பயபக்தி கொண்டவர்களுக்கு எல்லா மதங்களும் நிகரானவை; நல்லவை; என்று விளக்கி வந்தார்.[117]

ராமராஜியம் என்பது முற்றிலும் இந்து நாடோ, முஸ்லீம் நாடோ, கிறிஸ்தவ நாடோ அல்ல; அனைவரும் சகிப்புத்தன்மையுடன் ஒற்றுமையாக வாழும் நாடுதான் அது. தங்கள் கற்பனைப்படி உள்ள இஸ்லாம்தான் உலகம் முழுவதையும் ஆளவேண்டுமென்று ஒரு முஸல்மான் நினைத்தால் அது வீண் கனவுதான். அதைப் போலவே, இந்தியாவிலிருந்து இஸ்லாம், கிறிஸ்தவம் முதலான மதங்களை விரட்டிவிடலாம் என்று இந்துக்கள் நினைத்தால் அதுவும் வீண் கனவுதான் என்று தெளிவுபடுத்தினார்.[118]

காந்தி மதமாற்றத்தை வெறுத்தார்; மனமாற்றத்தை விரும்பினார். ஒரு இந்து இன்னும் சிறந்த இந்துவாகவும் ஒரு முஸ்லிம் இன்னும் சிறந்த முஸ்லிமாகவும் ஒரு கிறிஸ்தவர் இன்னும் சிறந்த கிறிஸ்தராகவும் உயரவேண்டும் என்பது அவரது விருப்பம்.[119] சமயங்கள் மதம் மாற்றும் பணியினைக் கைவிட்டு விட்டு அன்புப்பணியினை மேற்கொள்ள வேண்டும் என்பது அவரது வேண்டுகோள்.[120]

சமயங்கள் சமுதாயப்பணி புரிய வேண்டும் என்பதும் பல்வேறு சமயத்தவர் இணங்கி வாழும் சூழ்நிலை உருவாக வேண்டும் என்பதும் ராமராஜியத்தின் சமயக்கொள்கைகள் என்பது இந்தச் செய்திகள் வாயிலாகத் தெளிவுபடுகிறது.

### 1.1.2.5.3.4. பெண்ணுரிமை

ஆணுக்கு நிகரான மன ஆற்றல்கள் படைத்தவள் பெண்; ஆதலால், ஆணுக்கு சமமான உரிமைகள் அவளுக்கு உண்டு என்பது காந்தியின் கருத்து. சமயச் சாத்திரங்களில் பெண்ணுக்கு எதிரான கருத்துக்கள் இடம்பெற்றிருப்பதை எண்ணி வருந்தும் காந்தி, அவற்றைக் கடவுள் வாக்காகக் கருதவேண்டியது இல்லை என்றார். பழைய சாத்திரங்களில் பெண்ணுக்கு ஆதரவாக

இருக்கும் கருத்துக்களை மட்டுமே நாம் பின்பற்ற வேண்டும் என மொழிந்தார்[121] ராமராஜியத்தில் ஆண்களுக்கு அளிக்கப்படும் அனைத்து மரியாதைகளும் பெண்களுக்கும் அளிக்கப்படும்; ஆண், பெண் இருபாலாரின் கற்பும் தூய்மையும் காக்கப்படும் என்று தெளிவுபடுத்தினார்.[122] ராமராஜியம் பெண் விடுதலையில் நாட்டம் கொண்டுள்ளது என்பதனை இந்தக் கருத்துக்களால் அறியமுடிகிறது.

## 1.1.2.5.3.5. அரசியல் கொள்கைகள்

ராமராஜியம் முழுமையான ஜனநாயகத்தை விரும்புகிறது. பெரும்பான்மையான மக்களால் தேர்வு செய்யப்படுகிறவர்கள் ஆளும் பொறுப்பை மேற்கொள்ள வேண்டும்; அவர்களைக் கட்டுப்படுத்தும் உரிமையும் கல்வியும் ஒவ்வொரு குடிமகனுக்கும் வழங்கப்பட வேண்டும் என்றார் காந்தி. ஜனநாயகத்தில் குறைபாடுகள் இருப்பினும் அந்தக் குறைபாடுகளைத் தவிர்த்திட முயலவேண்டுமேயன்றி ஜனநாயகத்தை விலக்கக்கூடாது என்பது அவரது அரசியல் கொள்கை. ஆளுவோர் சுயநலம் இல்லாதவர்களாகவும் மக்களுடன் இணைந்து வாழ்ந்து அவர்களுக்குப் பணிவிடை செய்பவர்களாகவும் ஒழுக்கம் உடையவர்களாகவும் இருக்க வேண்டுமென்பது அவரது விருப்பம்.[123]

ராமராஜியம் கிராமங்களின் சுய ஆட்சியை விரும்புகிறது. சுதந்திரம் கீழிருந்துதான் தொடங்க வேண்டும்; ஒவ்வொரு கிராமமும் ஒரு முழுமையான குடியரசாகவோ அல்லது முழு அதிகாரம் உள்ள பஞ்சாயத்தாகவோ இருக்க வேண்டும்; கிராமங்கள் தங்களது அடிப்படைத் தேவைகளான உணவுப்பொருட்கள், உடைக்கான பருத்தி முதலியவற்றைத் தாமாகவே உற்பத்தி செய்துகொள்ள வேண்டும். இத்தகைய அரசியல் அமைந்தால் மட்டுமே இந்த மண் ஏகாதிபத்தியங்களின் சுரண்டலிலிருந்து தப்ப முடியும் என்பது காந்தியின் கருத்து.[124]

ராமராஜியம் முழுமையான சுதந்திரத்தை விரும்புகிறது. தனி நபர் சுதந்திரத்தை வரவேற்கும் காந்தி, அந்தச் சுதந்திரம் சமுதாயத்தின் நலனுக்குத் தீங்கு விளைவிக்கக்கூடாது என்றும் கூறி வந்தார். தான் ஒரு சமூக உறுப்பினர் என்பதை மனிதன் மறந்துவிடக்கூடாது என வேண்டுகோள் விடுத்தார். சுயராஜியம் என்பது கட்டுகளிலிருந்து விடுதலையடைவதேயன்றி கட்டுப்பாடுகளிலிருந்து விடுதலை அடைவது அல்ல என்று விளக்கினார். மக்கள் அனைவரும் அகிம்சையின் அடிப்படையில்தான் வாழவேண்டும்; அரசும் அகிம்சையின் அடிப்படையில்தான் இயங்க வேண்டும்; அகிம்சையின் வழியாகத்தான் முழுமையான சுதந்திரம் மலர முடியும் எனத் தெளிவுபடுத்தினார்.[125]

ராமராஜியம் உலக ஒற்றுமையை விரும்புகிறது. மாநிலங்கள் தங்கள் தனித்தன்மையைப் பாதுகாத்துக்கொள்ள முயலுவதில் தவறில்லை; ஆனால், அந்த முயற்சி தேசிய ஒருமைப் பாட்டுக்குத் தடையாக இருக்கக்கூடாது; தேசிய ஒருமைப்பாடு உலக ஒருமைப்பாட்டுக்குத் தடையாக இருக்கக்கூடாது; உலக ஒற்றுமையே நமது குறிக்கோள் என்று காந்தி சுட்டிக்காட்டினார். ஒரு நாட்டின் நிர்வாகத்தில் இன்னொரு நாடு தலையிடக்கூடாது; ஒரு நாட்டை இன்னொரு நாடு சுரண்டக்கூடாது; ஒரு நாடு தன்னிடம் உள்ள அறிவைப் பிற நாடுகளுக்கு வழங்கிட வேண்டும்; ராணுவமும் போரும் கூடாது; ஒவ்வொரு மனிதனும் தன்னை உலக உறுப்பினன் என்று சொல்லும் காலம் வரவேண்டும் என்றார்.[126]

முழுமையான ஜனநாயகம், கிராம சுயராஜியம், உலக மானுடம் என்னும் சிந்தனைகள் ராமராஜியக் கோட்பாட்டில் அதிக அழுத்தம் பெறுகின்றன என்பதை இந்தச் செய்திகள் வழியாக அறியமுடிகிறது.

## 1.1.2.5.3.6. கலாச்சார மாற்றம்

முழுமையான கலாச்சார மாற்றத்தில்தான் ராமராஜியம் உருவாக முடியும் என்கிறார் காந்தி. இந்தியக் கலாச்சாரம் எந்தெந்த நிலைகளில் மாறவேண்டும் என்பதையும் அவர் கோடிட்டுக் காட்டினார். உழைத்தல், உழைப்பு வேற்றுமைகளை ஒழித்தல், எளிமை, புலனடக்கம்,

தாய்மொழிக் கல்வி, கலை வளர்ச்சி, குடிசைத் தொழில்களும் கிராம நாகரிகமும் வளர்தல், சுற்றுப்புறச் சூழலைப் பேணுதல் முதலிய கலாச்சாரக் கூறுகளுக்கு அவர் மிகுந்த முக்கியத்துவம் அளித்தார். மது, சூது முதலியவற்றை எதிர்த்தார். பிற நாட்டுக் கலாச்சாரங்கள் நம் நாட்டில் நுழைவதில் தவறில்லை; ஆனால், அது நம்மை ஆதிக்கம் செலுத்த அனுமதிக்கக்கூடாது என்றார்.[127] இத்தகைய கலாச்சாரத்தில்தான் ராமராஜியம் உருவாக முடியும் என்பது அவரது நம்பிக்கை.

காந்தியடிகளின் ராமராஜியம் சிந்தனைகளைப் பகுத்துப் பார்க்கும்போது அது ஒரு முழுமையான மக்களாட்சித் தத்துவத்தையும் எளிமை கலந்த சமூக வாழ்வையும் வேலிகளைத் தாண்டிய மனித உறவுகளையும் வலியுறுத்துவதை உணர முடிகிறது. அவர் சுட்டிக்காட்டிய கலாச்சாரக் கூறுகள் மண்ணின் தன்மைக்கு ஏற்ப அமைந்துள்ளன. சமய நல்லிணக்கக் கருத்துக்கள் அவரது சிந்தனைகளில் விரிவாகவும் தெளிவாகவும் அமைந்துள்ளன. இன்றைய இந்தியாவில் சமயச் சார்புடைய அரசியல் இயக்கங்கள் கூறிவரும் ராமராஜியம் என்பதற்கும் காந்தியடிகளின் ராமராஜியக் கோட்பாட்டிற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு என்பதும், காந்தியின் ராமராஜியச் சிந்தனைகள்தான் புதிய மானுடத்துக்கு நேராக மனிதர்களை அழைத்துச் செல்ல முடியும் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்க செய்திகளாகும்.

### 1.1.2.6. பெரியார் விரும்பிய சுயமரியாதை உலகக் கோட்பாடு

தமிழ்நாட்டு மக்களால் பெரியார் என்று அழைக்கப்படும் ஈ.வெ.ராமசாமி (1879 - 1973) தம் காலத்தின் சமுதாய அவலங்களைக் கண்டு பெரிதும் வருந்தியவர். அந்த அவலங்களை மாற்றி புதியதோர் உலகம் காண விழைந்தவர். அவலங்கள் அகன்ற புதிய சமுதாயம் ஒன்றைப் படைப்பதற்காகவே அவர் சுயமரியாதை இயக்கத்தினைத் தோற்றுவித்தார். பெரியார் விரும்பிய புதிய சமுதாயத்தினைச் 'சுயமரியாதை உலகம்' என அவ்வியக்கத்தைச் சார்ந்தோர் கூறி வந்தனர். சுயமரியாதை இயக்கக் கவிஞராகிய பாரதி தாசனின்,

சாதிமத பேதங்கள் மூட வழக்கங்கள்
தாங்கிநடை பெற்றுவரும் சண்டையுலகிதனை
ஊதையினில் துரும்புபோல் அலக்கழிப்போம்; பின்னர்
ஒழித்திடுவோம் புதியதோர் உலகம் செய்வோம்!
பேதமிலா அறிவுடைய அவ்வுலகத்திற்குப்
பேசு சுயமரியாதை உலகுஎனப் பேர்வைப்போம்!

என்னும் கவிதை இதனைத் தெளிவுபடுத்துகிறது.[128] சுயமரியாதை இயக்கம் பற்றிய தெளிவான விளக்கம்,

1. சுயமரியாதை இயக்கம் உருவான சூழ்நிலை
2. சுயமரியாதை என்னும் சொல்லின் பொருளும் விளக்கமும்
3. சுயமரியாதை இயக்கத்தின் சமுதாயக் கோட்பாடுகள்

என்னும் தலைப்புகளின் கீழ் தரப்படுகின்றது.

#### 1.1.2.6.1. சுயமரியாதை இயக்கம் உருவான சூழ்நிலை

பெரியாரது காலத்தில் தமிழ்நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் வறுமை, தீண்டாமை, பெண்ணடிமைத்தனம் முதலிய சமுதாயக் கொடுமைகள் மேலோங்கி நின்றன. தாழ்த்தப்பட்ட மக்கள் வறுமையிலும் அறியாமையிலும் நோய்களிலும் வாடினர். பெண்கள் கல்வியின்றி, உரிமையின்றி அல்லல் உற்றனர். அரசியலிலும் நிர்வாகத்திலும் உயர் சாதியினரின் ஆதிக்கமே நிலவியது. அன்றைய சமயம் சாதிக் கொடுமைகளுக்கும் பெண்ணடிமைத்தனத்திற்கும் உடன்பட்டு

நின்றது; சாதி கடவுளால் படைக்கப்பட்டது என்றும் ஆண்கள் பெண்களை ஒடுக்குவதற்கு உரிமை பெற்றவர்கள் என்றும் போதித்து வந்தது. மட்டுமன்றி, சிலை வழிபாடுகளும் சடங்குகளும் சமய உலகில் மிகுந்திருந்தன. அதன் மூலம் உழைக்கும் மக்களின் பொருளும் காலமும் முயற்சியும் விரயம் ஆகிக்கொண்டிருந்தன. சமயத் தலைவர்கள் சுயநலமும் போலித்தனங்களும் கொண்டிருந்தனர். அவர்கள் உழைப்பவர்களைச் சுரண்டி, கோயில்களில் பொருள் குவித்து சுகபோக வாழ்க்கை வாழ்ந்து வந்தனர். தாழ்த்தப்பட்ட மக்களும் பெண்களும் சமய உலகின் சட்டங்களுக்கு அடிபணிந்து, ஒடுக்குமுறைகளை ஏற்றுக்கொண்டு சுயமரியாதை இழந்து நின்றனர். இத்தகைய சூழலில்தான் பெரியார் தமது பணியைத் தொடங்கினார்.

### 1.1.2.6.2. சுயமரியாதை என்னும் சொல்லின் பொருளும் விளக்கமும்

சுயமரியாதை என்னும் சொல்லுக்குத் தன்மானம் என்பது பொருள். தொடக்க காலத்தில் இந்நாட்டு மக்கள் அனைவரும் மானத்தோடும் புகழோடும் வீரத்தோடும் வாழ்ந்து வந்தனர் எனவும் இடைக்காலத்தில் ஏற்பட்ட சூழ்ச்சியினால்தான் மாந்தரில் ஒரு பிரிவினர் சுயமரியாதை இழந்தனர் எனவும் பெரியார் கூறிவந்தார். மீண்டும் அனைத்து மாந்தரும் தன்மானத்துடன் வாழ வழிகாண்பதே தமது இயக்கத்தின் குறிக்கோள் எனத் தெளிவுபடுத்தினார்.[129] பெரியாரின் சொல்லும் செயலும் இந்த இலக்கை நோக்கியே அமைந்திருந்தன.

### 1.1.2.6.3. சுயமரியாதை இயக்கத்தின் சமுதாயக் கோட்பாடுகள்

பொருளாதாரம், சமுதாயம், அரசியல், கலாச்சாரம் முதலியன குறித்து திட்டவட்டமான கருத்துக்களைப் பெரியார் வகுத்துக்கூறினார். அவை செயலாக்கம்பெறும்போது சுயமரியாதை உலகம் மலரும் என நம்பிக்கை அளித்தார்.

#### 1.1.2.6.3.1. பொருளியல் கொள்கை

சுயமரியாதை இயக்கம் பொருளாதார சமத்துவத்தை வலியுறுத்துகிறது. 'செல்வம் உலகின் பொதுச்சொத்து' என்னும் கருத்தினைக் கொண்டிருந்த பெரியார் வன்முறைகளாலும் சூழ்ச்சியாலுமே உலகில் ஏற்றத்தாழ்வுகள் உருவாகியுள்ளன என்றார். தனியுடைமை நிலவுமட்டும் வறுமையை ஒழிக்க முடியாது; உடைமைகள் பொதுவாக்கப்பட்டு உற்பத்திப் பொருட்கள் அனைவருக்கும் சீராகப் பகிர்ந்தளிக்கப்படும்போதுதான் வறுமைக்குத் தீர்வுகாண முடியும் எனக் கூறி வந்தார்.[130] சுயமரியாதை இயக்கக் கவிஞரான பாரதிதாசனின்,

> பொதுவுடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்
>
> புனிதமோ டதைஎங்கள் உயிரென்று காப்போம்

என்னும் கவிதையும் அவ்வியக்கத்தின் பொருளாதாரக் கோட்பாட்டினைக் கோடிட்டுக் காட்டுகிறது.[131] பொதுவுடைமையே சுயமரியாதை இயக்கத்தின் பொருளியல் கொள்கை என்பது இதன் வாயிலாகத் தெளிவுபடுகிறது.

#### 1.1.2.6.3.2. சாதிப் பிரச்சினை

பொருளாதார சமத்துவத்தைப் போலவே சமுதாய சமத்துவம் நிலவ வேண்டும் என்பதும் பெரியாரின் கொள்கையாக அமைந்துள்ளது. எல்லா மனிதரும் நிகரான நிலையும் வாழ்வும் இன்பமும் பெறத் தகுதியுடையவர் என்பது அவரது கருத்து. ஆதலால், சாதி கடவுளால் உருவாக்கப்பட்டது என்னும் மநுதர்மக் கோட்பாட்டை அவர் எதிர்த்தார். கடவுளால்தான் சாதி உருவாக்கப்பட்டது என்றால் அத்தகைய கடவுள் கோட்பாடு தேவையில்லை என்றார். கடவுள் மறுப்புத் தத்துவம் குறித்து அவரிடம் கேள்வி கேட்கப்பட்டபோது, பிறப்பின் அடிப்படையில் சாதி முறையை வகுத்துக்கூறும் சமுதாய அமைப்பை மாற்றவே கடவுளை மறுப்பதாகத் தெளிவுபடுத்தினார்.[132] தாழ்த்தப்பட்டவர்கள் விடுதலைக்காக வாழ்நாள் முழுவதும் உழைத்தார். அதற்காக எந்தத் துன்பத்தையுஆம் ஏற்றுக்கொள்ள அவர் தயாராக இருந்தார். பெரியாரின் கடவுள் மறுப்புத் தத்துவம் மனித நேயத்தின் ஒரு வெளிப்பாடுதான் என்பதையும் சமுதாய சமத்துவமே அவரது குறிக்கோள் என்பதையும் இந்தச் செய்திகள் வழியாக அறியமுடிகிறது.

### 1.1.2.6.3.3. சமயப் பார்வைகள்

சமயங்களைப் பெரியார் அறிவியல் முறையில் அணுகினார். மதம் என்பது பொது நலத்தில் ஆர்வம் கொண்ட பெரியவர்களால் தோற்றுவிக்கப்பட்டது; உலக வாழ்வுக்கு வழிகாட்டும் கொள்கைகளைக் கொண்டது; கால, இட, சூழ்நிலைக்கேற்ப மாற்றத்தக்கது; அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் இடம் தரக்கூடியது என்றால் தமக்கு அதில் தகராறு இல்லை எனக் கூறினார். அத்தகைய மதங்கள் மனித வாழ்வுக்குத் தேவை என்றும் கருத்து தெரிவித்தார். இதற்கு மாறாக, சமயக் கொள்கைகள் மீது கேள்விகள் எழுப்பக்கூடாது என்பதையும் சமயத்துக்காகவே மனிதன் என்பதையும் தம்மால் உடன்பட முடியாது என்றார்.[133]

சமயங்கள் மனித வாழ்வுக்குப் பயன்பட வேண்டும் என விழைந்தார் பெரியார். ''அன்பு என்னும் குணம்தான் சிவம்; அந்த அன்பைக் கைக்கொண்டு ஜீவன்களிடத்தில் அன்பு செலுத்துவதுதான் சைவம்'' என்றால் தாமும் ஒரு சைவனாக இருக்க ஆசைப்படுவதாகக் கூறினார். அதுபோல, ''ஜீவன்களிடத்தில் இரக்கம் காட்டுவது, ஜீவன்களுக்கு உதவி செய்வது ஆகிய குணங்கள்தான் விஷ்ணு; அக்குணங்களைக் கைக்கொண்டு ஒழுகுவதுதான் வைணவம்'' என்றால் தம்மையும் ஒரு வைணவன் என்று சொல்லிக்கொள்ள விரும்புவதாகக் குறிப்பிட்டார். இதற்கு மாறாக இன்ன குறியிடுகிறவன்தான் சைவன் அல்லது வைணவன் என்றால் அதைத் தம்மால் ஏற்றுக்கொள்ள முடியாது என்றார்.[134]

'உலகின் தோற்றத்துக்கும் இயக்கத்துக்கும் காரணமான நுண்பேராற்றலை இறைவன் என்று குறியீடு செய்பவர் மீது தமக்கு அதிகமாகத் தகராறு இல்லை' என்றார் பெரியார். அந்தக் கடவுளுக்கு வடிவங்கள் கற்பிப்பதையும் அதன் பேரில் சிலைவழிபாடுகள் பெருகுவதையும் அதனை முன்னிட்டு தேவையற்ற சடங்குகள் மிகுவதையும் அதற்காக மனிதனின் காலமும் பொருளும் முயற்சியும் விரயம் ஆவதையும் அவர் வெறுத்தார். சமயச் சட்டங்களால் மனிதம் சிதைவதைக் கண்டித்தார்.[135] மேலை நாடுகளில் பழங்காலக் கடவுள் கொள்கைகள் மாறிவிட்டதால் அந்நாடுகள் முன்னேறியுள்ளன எனக் கூறியதுடன் நம் நாட்டிலும் அத்தகைய மாற்றங்கள் நிகழ வேண்டும் எனக் குறிப்பிட்டார்.[136]

சமயத்தின் பேரில் மனிதர்கள் பிளவுபடக்கூடாது என்னும் கருத்தினைக் கொண்டிருந்த பெரியார் இந்த மண்ணில் இந்துக்களும் முஸ்லிம்களும் இணக்கமுடன் வாழவேண்டுமென வேண்டுகோள் விடுத்தார்.[137] பாரதிதாசனின்,

எக்கட்சி எம்மதத்தாரும் - இங்கு
எல்லாரும் உறவினர் என்றெண்ண வேண்டும்

என்னும் கவிதையும் சுயமரியாதை இயக்கத்தின் சமய நல்லிணக்கக் கொள்கைக்குச் சான்றாக அமைந்துள்ளது.[138]

சமயத்தின் பேரில் மனிதம் சிதையக்கூடாது என்பதையே சுயமரியாதை இயக்கம் தன் குறிக்கோளாய்க் கொண்டிருந்தது என்பதனை இந்தச் செய்திகள் வழியாக அறியமுடிகிறது.

### 1.1.2.6.3.4. பெண் விடுதலை

சுயமரியாதை இயக்கம் தாழ்த்தப்பட்டவர் விடுதலையைப் போலவே பெண் விடுதலைக்கும் மிகுந்த முக்கியத்துவம் அளித்தது. அங்க அமைப்பிலன்றி அறிவிலும் ஆற்றலிலும் பண்பிலும் பெண்கள் ஆண்களுக்கு நிகராகவே படைக்கப்பட்டிருக்கின்றனர்; ஆதலால், அவர்கள் சம உரிமை பெறுவதற்குத் தகுதி உடையவர்கள் என்பது பெரியாரின் கருத்து.[139]

ஆண்மக்கள் பெண்மக்களை நடத்தும் முறை மேல்ஜாதிக்காரன் கீழ்ஜாதிக்காரனை நடத்துவதைவிட, பணக்காரன் ஏழையை நடத்துவதைவிட, எஜமான் அடிமையை நடத்துவதைவிட மோசமானது எனச் சுட்டிய பெரியார் பெண்கள் மீதான அனைத்து

ஒடுக்குமுறைகளும் ஒழிய வேண்டும் என்றார். குழந்தை மணத்தை வன்மையாகக் கண்டித்த பெரியார், பெண்களுக்குச் சொத்துரிமை, காதல் சுதந்திரம், மணவிலக்கு, விதவை மணம் முதலிய உரிமைகளை வலியுறுத்தினார்.[140]

பெண்ணடிமைத்தனம் ஆழமாக வேரூன்றி நிற்பதற்குக் காரணம் பெண்களும் அதனை ஒப்புக்கொண்டு, அதற்கு உதவி செய்வதுதான் என்பதைப் பெரியார் உணர்ந்தார்; ஆதலால், பெண்களுக்கு விழிப்பூட்ட முயன்றார். பெண்கள் கல்வி கற்கவும் தொழில் புரியவும் முன்வரவேண்டும்; ஆணைப்போல் அறிவு பெறவும், ஆண்கள் பார்க்கும் அனைத்து வேலைகளைப் பார்க்கவும் தங்களால் முடியும் என்பதனைப் பெண்கள் உணர வேண்டும்; பிறர் கூறும் கருத்துக்களைப் பொறுமையுடன் கேட்டு, பிறகு அவற்றை ஆய்வு செய்து, கொள்ளுவன கொண்டு தள்ளுவன தள்ள வேண்டும்; பெண்கள் தங்கள் உடலையும் உடையையும் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும்; அதே வேளையில், அலங்காரப் பிரியர்களாகவும் நகைப்பித்து கொண்டவர்களாகவும் மாறிவிடக்கூடாது; நகை என்பது பெண்ணின் உரிமைக்குப் போடப்பட்டிருக்கும் பொன் விலங்காகும்; நவநாகரிகம் என்பது தம்மை அலங்கரிப்பதன்று; விமானம் ஓட்டுதல், இராணுவத்தில் பணிபுரிதல் போன்ற துறைகளில் பெண்கள் ஈடுபடுதலேயாகும். பெண் விடுதலைக்கான இத்தகைய கருத்துக்களை அவர் மக்கள் மன்றத்தில் பரப்பிச் சென்றார்.[141]

பெண் விடுதலை என்பது பெண்களால்தான் வரவேண்டுமேயன்றி ஆண்களால் வரமுடியாது என்னும் கருத்தினையும் பெரியார் கொண்டிருந்தார். 'ஆண்மை' என்னும் சொல்லே பெண்களை இழிவுபடுத்தும் முறையில்தான் உலக வழக்கில் பயன்படுத்தப்படுகிறது என்பதைச் சுட்டிக் காட்டினார். பெண்கள் விடுதலை அடைய வேண்டுமாயின் ஆண்மை என்னும் கோட்பாடு அழிக்கப்பட வேண்டும் என்றார். பெண் விடுதலையில்தான் ஆண்களும் தங்கள் துயரங்களிலிருந்தும் தொல்லைகளிலிருந்தும் விடுதலைபெற முடியும் என்பதையும் சுட்டிக் காட்டினார்.[142]

சுயமரியாதை இயக்கம் பெண் விடுதலையில் தெளிவாக இருந்தது என்பதனை இந்தக் கருத்துக்கள் வழியாக அறிய முடிகிறது.

### 1.1.2.6.3.5. அரசியல் சிந்தனைகள்

அனைத்து மாந்தருக்கும் நிகரான உரிமையும் வாழ்வும் வழங்கும் அரசியல் அமைப்பைப் பெரியார் எதிர்பார்த்தார். பொருளாதார சமத்துவமும் சமுதாய சமத்துவமும் நிலவுகின்ற நாட்டைத்தான் நாடு என்றும் சுதந்திர பூமி என்றும் கூறமுடியும்; இவை இல்லாத நாட்டைச் சிறைக்கூடம் என்றும் அடிமைச் சமுதாயம் என்றுமே சொல்ல முடியும் எனச் சுட்டிக்காட்டினார். இத்தகைய நிலையை உருவாக்க வேண்டிய பொறுப்பு அரசுக்கு உண்டு; அரசினை இந்த இலக்கு நோக்கிச் செயல்படுத்தவேண்டிய பொறுப்பு மக்களுக்கு உண்டு என்று ஜனநாயகத்தின் நெறிமுறைகளை மக்களுக்கு விளக்கினார். இந்திய ஜனநாயகத்தின் தோல்விக்கு மக்களின் விழிப்பின்மையே முக்கிய காரணம் எனவும் கோடிட்டுக் காட்டினார்.[143] மக்கள் விழிப்படைந்து அரசியலை நெறிப்படுத்த வேண்டும் என்னும் கருத்தினைப் பெரியார் கொண்டிருந்தார் என்பது இந்தச் செய்திகளால் தெளிவுபடுகிறது.

### 1.1.2.6.3.6. கலாச்சார மாற்றம்

சுயமரியாதை இயக்கம் பொருளாதார, அரசியல் மாற்றங்களை வலியுறுத்தினாலும் அவற்றைவிட கலாச்சார மாற்றத்துக்கே அதிக அழுத்தம் கொடுத்தது. மக்களின் எண்ணங்களும் வாழ்க்கைமுறைகளும் முற்றிலும் மாற்றியமைக்கப்பட வேண்டுமென்று பெரியார் கூறி வந்தார். கல்வி வளர்ச்சி, தொழில் வளர்ச்சி, அறிவியல் வளர்ச்சி, அறிவியல் பார்வை, உழைப்பு, எளிமை, கட்டுப்பாடு முதலிய கலாச்சாரக் கூறுகளுக்கு அவர் மிகுந்த முக்கியத்துவம் அளித்தார். எல்லாவிதமான அடிமைத்தனங்களும் மூடநம்பிக்கைகளும் ஒழிந்து அனைத்து மாந்தரும் தன்மான உணர்வோடும் அறிவாற்றலோடும் வாழ்வதை விரும்பினார்.[144] அத்தகைய வாழ்வில்தான் புத்துலகம் மலர முடியும் என்பதே அவர் கருத்தாகும்.

'சுயமரியாதை' என்னும் பெயரில் அறிமுகமாகியுள்ள பெரியாரின் கருத்துக்கள் கிருதயுகம், இறையரசு முதலிய கோட்பாடுகளில் உள்ளது போல புதிய மானுடத்துக்கான உள்ளடக்கத்தையே கொண்டுள்ளன. அவரது சமயக் கொள்கைகள் மானுட மேம்பாட்டையே குறிக்கோளாகக் கொண்டு அமைந்துள்ளன. பெண் விடுதலை பற்றிய கருத்துக்கள் பெரியார் சிந்தனைகளில் விரிவும் தெளிவும் பெற்றுள்ளன. புதிய மானுடத்தைப் படைக்க விரும்புவோருக்குத் துணை நல்கும் வகையிலேயே அவரது சிந்தனைகள் அமைந்துள்ளன.

## 1.1.3. தொகுப்புரை

நாடு, மொழி, இன, கால எல்லைகளைக் கடந்து ஒட்டுமொத்தமான மனித இனத்தையும், மனிதர் தம் இயல்புகள், பண்புகள், மாண்புகள் யாவற்றையும் உள்ளடக்கிக் காட்டும் ஒரு குறியீட்டுச் சொல்லே மானுடம் ஆகும்.

மானுடத்தின் வளர்ச்சிக்கான தடைகள் அகன்று உலகம் எங்கணும் உள்ள மனிதர்கள் உடல், உள்ளம், உணர்வு என்னும் மூன்று கூறுகளிலும் முழுமையான வளர்ச்சிபெறும் நிலையே புதிய மானுடம் ஆகும்.

புதிய மானுடம் குறித்து உலகின் வெவ்வேறு திசைகளில் வெவ்வேறு காலகட்டங்களில் ஆன்றோர்கள் சிந்தனை செய்து கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். அவர்களுள் வைகுண்டர், விவேகானந்தர், பாரதியார், யேசுநாதர், முகம்மது நபி, காரல் மார்க்ஸ், எங்கெல்ஸ், காந்தியடிகள், பெரியார் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் சமயங்களையோ அல்லது சமுதாய இயக்கங்களையோ சார்ந்துநின்று மனித விடுதலை பற்றியே சிந்தித்துள்ளனர். புதிய மானுடத்தை அடைவதற்காக இவர்கள் வகுத்துக்கூறியுள்ள நெறிமுறைகள் கிருதயுகம், இறையரசு, சாந்தி மார்க்கம், பொதுவுடைமை, ராமராஜியம், சுயமரியாதை உலகம் என்னும் கோட்பாடுகளாக வடிவெடுத்துள்ளன.

புதிய மானுடம் பற்றி எழுந்த இந்தக் கோட்பாடுகள் ஒவ்வொன்றும் முழுமை பெற்றவை என்று கூறமுடியாது. காலந்தோறும் மானுடச் சிந்தனைகள் வளர்ச்சிபெற்று வருவதையும் ஒன்றில் இல்லாதது இன்னொன்றில் இடம்பெற்றிருப்பதையும் அறியமுடிகிறது.

புதிய மானுடம் பற்றிய சிந்தனைகள் ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு விதமாக வெளிப்பட்டுவந்தாலும், அவலங்களை ஒழிப்பதற்கான வழிமுறைகளைக் கூறுவதில் அவற்றுக்கிடையே வேறுபாடுகள் தென்பட்டாலும் குறிப்பிட்ட பண்பு நிலைகளை அனைத்துக் கோட்பாடுகளும் வலியுறுத்துகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. அந்தப் பண்புகள் பின்வருமாறு:

- வறுமை ஒழிந்து, வாழ்க்கைத் தேவைகள் அனைவருக்கும் நிறைவு செய்யப்படுதல்
- சாதி, இன ஒடுக்குதல்கள் ஒழிந்து சமுதாய சமத்துவம் நிலவுதல்
- சமயத்தின்பேரில் எழும் சண்டைகள் ஒழிந்து மனிதர் அனைவரும் இணக்கமுடன் வாழுதல்
- பெண்ணடிமைத்தனம் அகன்று ஆண் பெண் சமத்துவம் நிலவுதல்
- அனைத்து மாந்தரின் உரிமைகளுக்கும் மதிப்பளிக்கும் அரசியல் அமைப்பு அமைதல்
- மக்களின் மன அமைவுகளில் மாற்றம் ஏற்பட்டு புதிய கலாச்சாரம் உருவாதல்

இந்தப் பண்புகள் செயலாக்கம்பெறும்போது புதிய மானுடம் மலரும் என்பதே இங்கு கூறப்பட்டுள்ள செய்திகளின் சாரமாகும்.

புதிய மானுடச் சிந்தனைகளை காலத்தின் தேவைக்கேற்ப வளர்த்தெடுக்க வேண்டியதும் மக்களிடம் கொண்டுசேர்க்க வேண்டியதும் புதிய மானுடத்தில் ஆர்வம் கொண்டோரின் கடமையாகும். புதுக்கவிதையில் இந்தச் சிந்தனைகள் எவ்வாறு வளர்ச்சியும் தெளிவும் பெற்றுவருகின்றன என்பதை அடுத்து வரும் இயல்கள் விளக்குகின்றன.

o

# குறிப்புகள்

1. **கம்பராமாயணம்,** யுத்தகாண்டம், நட்புகோட்படலம், பத்.எ.19.

2. உலோகாயதச்சித்தர், **சித்தர்பாடல்கள்,** உலோகாயதம், பத்.எ.7.

3. அ) மானிடம், மானுடம் ஆகிய இருபதங்களும் தமிழில் மனிதனின் மானுஷிகத் தன்மையைக் குறிப்பனவாகும்.

கா. சிவத்தம்பி, **தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும்,** ப.129.

ஆ) மனிதனை, அவன் இயல்பினை, அவன் ஆக்கத்தினை, வரலாறு, இலக்கியம், கலை ஆகியவற்றின் மையக்கருத்தாகக் கொள்ளும் மெய்யியலும் கண்ணோட்டமும் ஹியூமனிஸம் (மானுடம்) எனப்படும்.

பார்க்க., மேலது, ப.130.

இ) தமிழில் மனிதன், மானுடன் ஆகிய சொற்கள் கிட்டத்தட்ட ஒரே பொருளுள்ள சொற்களாகத் தோன்றுகின்றன. ஆனால் உண்மையில் மனிதன் என்ற சொல் உயிரியல் ரீதியான ஒரு குறியீடு. மானுடன் என்ற சொல் உயர்ந்து, உயர்ந்து, உயர்ந்து சென்று மனிதகுலம் முழுமையும் தழுவிநிற்கும் இதயமுள்ள மாமனிதனைக் குறிக்கும் சொல்லாகப் பரிணாமம் அடைந்துள்ளது.

பொன்னீலன், **ஜீவா என்றொரு மானுடன்,** ப.349.

ஈ) ஒட்டுமொத்தமான மனித இனத்தை - மனிதஇனப்பண்பை, காட்சிப்பொருளாக அன்றி கருத்துப்பொருளாக இருக்கும் மனித இயல்பை - காலமும் இடமும் கடந்து மனிதர் அனைவரையும் - அவர்தம் மாண்புகள் அனைத்தையும் உள்ளடக்கிக்காட்டும் மனிதப்பாங்கை மானுடம் என்னும் சொல் உணர்த்துகிறது எனலாம்.

சாமுவேல்தாசன், 'புதிய மானுடத்தின் முதல்மனிதர் ', **சத்துணவு (ஜனவரி, 1984),** ப.10.

உ) Humanism is "the attitude of mind which attaches primary importance to man and to his faculties, affairs, temporal aspirations and well-being".

- ***Encyclopaedia Britannica, Vol. 11, p.876.***

ஊ) Humanism is cosmopolitan. It does not run after the utopia of inter nationalism, which presupposes the existence of atuonomous National States. The ideal of One World, or a World Government, is not compatible with the continuation of National States. The one makes of the other a pious desire or wishful thinking. A cosmopolitan commonwealth of free men and women is a possibility. It will be a spiritual community, not limited by the boundaries of National States - capitalist, fascist, communist or of any other kind - which will gradually disappear under the impact of cosmopolitan Humanism. That is the Radical perspective of the future of mankind.

- M.N. Roy, ***New Humanism A Manifesto,*** p.37.

4. மனித தத்துவத்திற்கு நாம் பல வார்த்தைகள் வைத்துக்கொண்டிருக்கிறோம். என்னைப் பொறுத்தவரை மனிதாபிமானம், மானுடம் என்னும் வார்த்தைகளை விட மனிதம் என்ற வார்த்தையே சிறப்பானதாகத் தோன்றுகிறது.

கே. பாலதண்டாயுதம், **இலக்கியத்தில் மனிதநேயம்,** ப.1.

5. M.N. Roy, op.cit., preface.

6. Anand Amaladass, Sebasti L.Raj, et.al., Philosophy and Human Development, p.5.

7. மநுதர்ம சாஸ்திரம் 1 : 69 - 70, 81 - 86.

8. அ) '... வந்ததே / ஆழ்கலத்து அன்ன கலி '
**நாலடியார்,** பா.எ.12.

ஆ) 'கலிக்கு இறையாய நெஞ்சின் கட்டியங்காரன் '
**சீவக சிந்தாமணி,** நாமகள் இலம்பகம், பத். எ.266.

இ) 'ஞாலத்தைப் புன்னெறியில் ஆக்கும் இருங்கலி'
**நளவெண்பா,** பா.எ.164.

9. க. கைலாசபதி, **ஒப்பியல் இலக்கியம்,** பக். 120 - 153.

10. 1808 - ஆம் ஆண்டு குமரிமுனைக்கு அருகில் உள்ள சாமித்தோப்பு என்னும் ஊரில் பிறந்த இவரது இயற்பெயர் முத்துக்குட்டி என்பது. அன்றைய குமரி மாவட்டம் திருவிதாங்கூர் மன்னனுக்கு அடிமைப்பட்டுக் கிடந்தது. தாழ்த்தப்பட்ட மக்கள் தீண்டாமைக் கொடுமைக்கு உட்பட்டிருந்தனர். இவர், 'தாழக்கிடப்பாரைத் தற்காப்பதுவே தருமம் ' என்னும் தத்துவத்தை உருவாக்கி சாதி ஒடுக்குமுறைக்கு எதிராகப் போராடத் தொடங்கினார். ஊருக்கு நடுவில் பொதுக்கிணறு வெட்டி அதற்கு 'முந்திரிக்கிணறு ' எனப் பெயரிட்டு அனைத்து சாதியினரும் அதில் நீர் எடுக்க வழிசெய்தார். தாழ்த்தப்பட்ட மக்களைத் தலைப்பாகை அணியச் செய்தார்; சாதி வேற்றுமை ஒழிந்திடச் சமபந்தி நடத்தினார். வள்ளலாருக்கு முன்பே ஆன்மநேய ஒருமைப்பாட்டை நிறுவினார். தமது புரட்சிகர செயல்களால் மன்னனின் கோபத்துக்கு ஆளாகி ஏறத்தாழ நான்கு மாதங்கள் சிறைத்தண்டனை பெற்றார். சிறைத் தண்டனைக்குப் பிறகும் அவரது கொள்கையில் மாற்றம் இல்லை. வாழ்நாள் முழுதும் ஒடுக்கப்பட்ட மக்களுக்காகப் போராடிய இவர் தமது நாற்பத்துமூன்று வயதில் இயற்கை எய்தினார்.

பிரபஞ்சன், ' வைகுண்டர் என்னும் புரட்சிக்காரர் ', **நக்கீரன்** (4 - 3 - 93), பக். 26 - 27.

11. **நாலாயிர திவ்வியப் பிரபந்தம்,** திருவாய்மொழி 5 : 2 : 1, 3.

12. இரா. அரிகோபாலன், **அகிலத்திரட்டு அம்மானை,** பக்.408, 332, 196.
இரா. அரிகோபாலன் என்பவர் வைகுண்டரின் சீடர்களுள் ஒருவர். வைகுண்டரின் சிந்தனைகளுக்கு இவர்தான் நூல்வடிவம் கொடுத்துள்ளார்.

13. விவேகானந்தர், **இந்தியத்தாயின் பணிக்கு இளைஞர்களே வருக,** ப.103.

14. பாரதியார், **ஞானரதம்,** ப. 74.

15. அ) **பாரதியார் கவிதைகள்,** 'யோகசித்தி', பத்.எ.9.

ஆ) மேலது, ' சொல்', பத்.எ.9.

இ) மேலது, 'விநாயகர் நான்மணிமாலை' , பத்.எ.39.

ஈ) மேலது, 'புதிய ஆத்திச்சூடி , அடி.1 - 10.

16. இரா. அரிகோபாலன், மு.நூ., ப.197.

17. விவேகானந்தர், மு.நூ., பக். 93 - 94.

18. **பாரதியார் கட்டுரைகள்,** ப.153.

19. **பாரதியார் கவிதைகள்,** 'பாரத சமுதாயம்' , அடி.3 - 6.

20. **நாலாயிர திவ்வியப் பிரபந்தம்,** திருவாய்மொழி 5:2:10.

21. **பாரதியார் கட்டுரைகள்,** ப.248.

22. இரா. அரிகோபாலன், மு.நூ., ப.278.

23. விவேகானந்தர், மு.நூ., பக்.102 - 104.

24. **பாரதியார் கட்டுரைகள்,** ப.32.

25. ரா. கணபதி, **சுவாமி விவேகானந்தர்,** ப.181.

26. விவேகானந்தர், மு.நூ., பக்.18,35,86.

27. **பாரதியார் கவிதைகள்,** 'புதிய ஆத்திச்சூடி' , அடி.1 - 10.

28. **பாரதியார் கட்டுரைகள்,** ப.232.

29. விவேகானந்தர், **இந்தியப் பிரசங்கங்கள்,** ப.98.

30. ரா. கணபதி, மு.நூ., பக்.575 - 583.

31. **பாரதியார் கட்டுரைகள்,** ப.102.

32. இரா. அரிகோபாலன், மு.நூ., பக்.368 - 371.

33. மேலது, ப.303.

34. **பாரதியார் கவிதைகள்,** 'புதிய ருஷியா' , பத்.எ.1 - 6.

35. அ) நாம் உயரவேண்டுமானால்... மேலை நாடுகளின் கலைகளையும்
விஞ்ஞானங்களையும் கற்கவேண்டும்.
விவேகானந்தர், **எழுமின்! வி ழிமின்!,** ப.87.

ஆ) இன்று தேவர்களை அழைக்கிறோம்.
இந்த மண்ணுலகத்திலே மீளவும் கிருதயுகத்தைக் காட்டும் பொருட்டாக.

அறிவின்மை, அசுத்தம், சிறுமை, நோய், வறுமை, கொடுமை, பிரிவு, அநீதி, பொய் என்ற ராக்ஷஸக் கூட்டங்களை அழித்து மனித ஜாதிக்கு விடுதலைதரும் பொருட்டாக.

கல்வி , அறிவு, தூய்மை, பெருமை, இன்பம், செல்வம், நேர்மை, ஒற்றுமை, நீதி, உண்மை என்ற ஒளிகளெல்லாம் வெற்றிபெறும் பொருட்டாக.
**பாரதியார் கட்டுரைகள்,** *ப.153.*

இ) '...... சமத்வ நெறியிலே பாய்ந்து செல்வோம்...கலியை அழிப்போம்.'

மேலது, ப.32.

ஈ) எல்லா உயிர்களிடத்திலும் அன்பு செலுத்தத் தொடங்குவோம். கலியை அழிப்போம்.

மேலது.

36. **மநுதர்ம சாஸ்திரம்,** *1 : 31 ; 5 : 147 - 156.*

37. க. கைலாசபதி, மு.நூ., பக்.143 - 153.

38. இரா. அரிகோபாலன், மு.நூ., பக்.196 - 198.

39. இறையரசு என்பது மறுவுலக வாழ்வைக் குறிப்பது என்னும் சிந்தனையும் சமய உலகில் உண்டு. ஆயினும் 'இறையரசு உங்கள் நடுவில் உள்ளது' **(லூக்கா, 17 : 21 )** என்னும் யேசுவின் வாக்கும் 'உமது அரசு வருக' **(மத்தேயு** *6 : 10* **)** என்னும் அவரது இறைவேண்டலும் அது, இம்மை வாழ்வை உள்ளடக்கியதேயாகும் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. யேசுவின் பணிகளும் இந்தக் கருத்துக்கு அரண் சேர்க்கின்றன.

40. அ) அநியாயமாய்த் தன்வீட்டையும், அக்கிரமமாய்த் தன் அறைகளையும் கட்டுகிறவனுக்கு ஐயோ கேடு! அவன் தன் அயலானைக் கூலியின்றி உழைக்கச் செய்கிறான்; அவனுக்குக் கூலி கொடுக்கிறதில்லை.

அவன், 'பெரிய வீட்டையும் அகலமான மேலறைகளையும் எனக்குக் கட்டிக்கொள்வேன்' என்கிறான்; அவன் தனக்குப் பலகணிகளை அமைத்துக் கொள்கிறான்; கேதுரு பலகைகளால் சுவரைமூடிச் சிவப்பு வண்ணம் பூசி அழகுபடுத்துகிறான்.

**எரேமியா (எரேமியாஸ்) 22 : 13 - 14.**

ஆ) கொடியவர்களின் வீட்டில் குவிந்திருக்கும் அக்கிரமங்களையும், சபிக்கப்பட்ட அந்த கள்ளமரக்காலையும் நாம் மறப்போமா?

கள்ளத் தராசையும், கள்ள எடைக்கற்களுள்ள பையையும் வைத்திருப்பவனை நேர்மையானவன் என விட்டுவி டுவோமா?

நகரத்தின் பணக்காரர்கள் கொடுமை நிறைந்தவர்கள், அங்கே வாழ்கிறவர்கள் பொய் பேசுகிறார்கள், அவர்கள் வாயிலுள்ள நாக்கு வஞ்சகம் நிறைந்தது.

**மீகா (மிக்கேயாஸ்)** *6 : 10 - 12.*

இ) மேய்ப்பன் இல்லாததால் என் ஆடுகள் சூறையாகி, என் ஆடுகள் காட்டு மிருகங்கட்கெல்லாம் இரையாய்ப் போயின... மேய்ப்பர்கள் மந்தையை மேய்க்காமல் தங்களையே மேய்த்தார்கள்.

**எசேக்கியேல்** *34 : 8.*

ஈ) அவர் நியாயத்துக்குக் காத்திருந்தார், இதோ, கொடுமை; நீதிக்குக் காத்திருந்தார், இதோ, முறைப்பாடு.

**ஏசாயா (இசையாஸ்)** *5 : 7.*

உ) அக்கிரமத்தின் சங்கிலிகளை அறுத்துவிடு, அமுத்தியிறுத்தும் நுகத்தடிகளை இறக்கு; ஒடுக்கப்பட்டவர்களை உரிமை மக்களாய் வி டுதலை செய், சுமையானதையெல்லாம் உடைத்தெறி;

பதித்திருப்பவனுக்கு உன் அப்பத்தைப் பகிர்ந்து கொடு, ஏழைகளுக்கும் அந்நியருக்கும் உன்வீட்டில் தங்குவதற்கு இடம் கொடு; ஆடையில்லாதவனைக் கண்டால் அவனைப் போர்த்து;

உன் இனத்தானை அவமதிக்காதே; இதுவன்றோ நாம் விரும்பும் மேலான நோன்பு.

மேலது, *58 : 6 - 7.*

ஊ) உங்கள் திருவிழாக்களை அருவருக்கிறோம், வெறுக்கிறோம்; உங்கள் வழிபாட்டுக் கூட்டங்களில் நமக்கு விருப்பமே இல்லை.

தகனப்பலிகளும் உணவுப்பலிகளும் நமக்கு நீங்கள் கொடுத்தாலும் நாம் ஏற்கமாட்டோம்; சமாதானப் பலிகளான உங்கள் கொழுத்த மிருகங்களையும் நாம் ஏறெடுத்துக்கூடப் பார்க்க மாட்டோம்.

உங்கள் பாடல்களின் பண்ணை நம்மிடமிருந்து அகற்றுங்கள், உங்கள் வீணைகளின் இசையை நாம் கேட்கமாட்டோம்.

அதற்கு மாறாக, நீதி தண்ணீரைப்போல வழிந்தோடட்டும், நேர்மை நீரோடையைப் போல பாயட்டும்.

**ஆமோஸ்** *5 : 21 – 24*

எ) இதோ, புதிய வானத்தையும் புதிய பூமியையும் நாம் படைக்கிறோம். முன்னையவை நினைவில் இருக்கமாட்டா; எண்ணத்திலும் தோன்றமாட்டா.

**ஏசாயா (இசையாஸ்)** *65 : 17.*

41. **மாற்கு** *10 : 25;* **லூக்கா** *16 : 16, 17 : 21.*

42. **லூக்கா** *4 : 16 - 19.*

43. **ஏசாயா (இசையாஸ்)** *40 : 4.*

44. ஞானராபின்சன், **ஏழைக்கு நற்செய்தி,** ப.21.

45. **ஏசாயா (இசையாஸ்)** *11 : 6.*

46. **மீகா (மிக்கேயாஸ்)** *4 : 3 - 4.*

47. **ஏசாயா (இசையாஸ்)** *65 : 21 - 22.*

48. **மீகா (மிக்கேயாஸ்)** *4 : 5.*

49. **ஏசாயா (இசையாஸ்)** 35 : 5 - 6.

50. மேலது, 65 : 20.

51. மேலது, 35 : 6 - 7.

52. மேலது, 11 : 9.

53. மேலது, 65 : 17.

54. **ஆதியாகமம்** 1 : 26 - 31, 6 : 5 - 6.

55. **லூாக்கா** 4 : 18 - 19.

56. மேலது, 19 : 10.

57. **மாற்கு** 10 : 17 - 25; **லூாக்கா** 12 : 16, 18 : 18 - 30.

58. **மத்தேயு** 20 : 1 - 16.

59. **மத்தேயு** 15 : 21 - 28; மாற்கு 7 : 24 - 30; **லூாக்கா** 10 : 25 - 37;**யோவான் (அருளப்பர்)** 4 :1-14.

60. **மத்தேயு** 23 : 1 - 32; **மாற்கு** 12 : 38 - 40; **லூாக்கா** 20 : 45 - 47.

61. **லூாக்கா** 7 : 1 - 10.

62. **மாற்கு** 10 : 1 - 10; **லூாக்கா** 10 : 1 - 12, 38 - 42; 7 : 37 - 50; **மத்தேயு** 5 : 27 - 28; 19 : 1 - 9. ( விவிலியத்தில் பெண்ணடிமைத்தனத்திற்கு உடன்பாடான பக்திகளும் உள்ளன. அவை, யேசுவுக்கு முன்னும் பின்னும் வந்தவர்களின் சிந்தனைகளில்தானேயன்றி யேசுவி ன் சிந்தனைகளில் அல்ல என்பது குறிப்பிடத்தக்கது.)

63. **மாற்கு** 10 : 41 - 45.

64. **லூாக்கா** 13 : 32.

65. **மத்தேயு** 5 : 6 - 10.

66. அ) 'அயலானுக்கு அன்பு; பகைவனுக்கு வெறுப்பு' என்று சொல்லியுள்ளதைக் கேட்டிருக்கிறீர்கள். நானோ உங்களுக்குச் சொல்கிறேன்: உங்கள் பகைவர்களுக்கு அன்பு செய்யுங்கள்; உங்களைத் துன்புறுத்துவோருக்காகச் செபியுங்கள்.

**மத்தேயு** 5 : 43 - 44.

ஆ) உலகிற்கு உப்பு நீங்கள்... உலகிற்கு ஒளி நீங்கள்.

மேலது, 13 - 14.

இ) நீதியின்பால் பசிதாகமுள்ளோர் பேறுபெற்றோர், ஏனெனில் அவர்கள் நிறைவு பெறுவர்.

இரக்கமுடையோர் பேறுபெற்றோர், ஏனெனில் அவர்கள் இரக்கம் பெறுவர்.

மேலது, 6 - 7.

ஈ) திராட்சைத்தோட்டத் தொழிலாளர்பற்றி யேசுநாதர் கூறிய உவமைக்கதை உழைப்புக்கும் உழைப்பவனுக்கும் அவர் முக்கியத்துவம் அளித்தார் என்பதை உணர்த்துகிறது.

மேலது 20 : 1 - 15.

உ. யேசுநாதர் போதகர்கள் நடுவி ல் வி னாக்கள் எழுப்பியதும் போலித்தீர்க்கத்தரிசிகளிடம் எச்சரிக்கையாய் இருக்கச் சொன்னதும் அவரது ஆய்ந்து தெளியும் பண்புக்குச் சான்றுகளாகும்.

**லூக்கா** 2 : 41 - 47; மத்தேயு 5 : 15 - 20.

67. இஸ்லாம் மறுமையில் நம்பிக்கை கொண்டிருந்தாலும், இவ்வுலக வாழ்வைப் புறக்கணிக்குமாறு கூறவில்லை. உலகில் அனைவருக்கும் நல்வாழ்வு கிடைக்கவேண்டுமென்றே இஸ்லாம் பேசுகிறது. மறுமையைப்போல இம்மையிலும் நன்மை கிடைக்கவேண்டுமென்பது இஸ்லாமியப் பிரார்த்தனையின் ஒரு பகுதியாகவும் (குர்ஆன் 2 : 201) அமைந்துள்ளது.

68. அஸ்கர்அலி எஞ்ஜினியர், **இஸ்லாமின் தோற்றமும் வளர்ச்சியும்,** பக். 1 - 109.

69. ஹமுத ஆப்த் அல் அத்தி, (மொ.பெ.) மு. குலாம் முஹம்மத், **இஸ்லாம் உங்கள பார்வைக்கு,** ப.21.

70. கா. அப்துல்கபூர், **இனிக்கும் இறைமொழி,** தொகுதி1, ப.32.

(இஸ்லாமியர் ஒருவர் இன்னொருவரைச் சந்திக்கும்போது கூறும் 'அஸ்ஸலாமு அலைக்கும்' என்னும் தொடருக்கு 'உங்கள் மீது சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக' என்பதே பொருளாகும்.)

71. ஹதீதுகள், முகம்மது நபியின் வாக்குகளையும், அவரது செயல்களையும், அவர் முன்னிலையில் நடைபெற்று அவரால் மறுக்கப்படாத நிகழ்ச்சிகளையும் தன்னகத்தே கொண்டுள்ளன. இஸ்லாம், குர்ஆனை இறைமொழி என்றும் ஹதீதுகளை நபிமொழி என்றும் கூறுகிறது. இரண்டையுமே அது புனித நூல்களாகப் (ஷரீபு) போற்றுகிறது.

காலப்போக்கில் குர்ஆனுக்கு மாறுபட்ட சிந்தனைகளும் ஹதீதுகளில் இடைச் செருகல்களாகப் புகுந்தன. ஆதலால், அவற்றைத் தேர்வு செய்யவேண்டிய தேவை உருவானது. நபி மொழிகளில் தேர்ச்சிபெற்றோர் (முகத்திதுகள்) குர்ஆனோடு ஒப்பிட்டுப் பார்த்து அதனோடு ஒத்துள்ள ஹதீதுகளை மட்டும் தேர்வு செய்தனர்; அல்லாதவற்றை நீக்கினர்.

**அல்ஹதிஸ் (**பெருமானாரின் பொன்மொழிப் பேழை)

தொகுதி 1, பக். I - XII.

72. Ghulam Sarwar, **Islam Beliefs and Teachings,** pp. 74 - 76.

73. Ibid., p.40.

74. கா. அப்துல் கபூர், மு.நூ., ப.124.

75. ஹமுத அப்த் அல் அத்தி, மு.நூ., பக். 175 - 176.

76. குர்**ஆன்** 23 : 84 - 85.

77. கா. அப்துல் கபூர், **நபிமொழி நானூறு,** எண்.126, 127, 165.

78. மேலது, எண்.371.

79. Asghar Ali Engineer, **Islam and Liberation Theology**, p.32.

80. அஸ்கர் அலி எஞ்ஜினியர், **இஸ்லாமின் தோற்றமும் வளர்ச்சியும்,** ப.100.

81. **குர்ஆன்** 10 : 47; 2 : 285.

82. மேலது, 6 : 109.

83. மேலது, 4 : 150 -151.

84. பா. தாவூத்ஷா, ஏ.என். முஹம்மத் யூஸுப் பாஜில், **நபிகள் நாயக மான்மியம்,** பக். 57 -63.

85. Asghar Ali Engineer, **Islam and Liberation Theology**, pp.171 - 184.

86. Ibid.

87. **குர்ஆன்** 4 : 3.

ஆடவர்கள் எண்ணற்ற மனைவியரோடு வாழ்ந்த காலத்தில் நான்கு மனைவியருக்கு மேல் இருக்கக்கூடாது எனச் சட்டம் இயற்றியது வரலாற்று நோக்கில் பார்க்கும்போது முற்போக்கானதுதான் என்று மார்க்சியச் சிந்தனையாளரும் கருத்து தெரிவித்துள்ளனர்.

பி. ராமமூர்த்தி, **ஷபானு வழக்கும் ஷரியத் சட்டமும்,** ப.26.

88. **குர்ஆன்** 33 : 59.

89. Asghar Ali Engineer, op.cit., pp.6 - 8.

90. Ibid.

91. கா. அப்துல் கபூர், மு.நா., எண்.245, 310, 370.

92. **குர்ஆன்** 2 : 275 - 278.

93. மேலது, 2 : 219.

94. கா. அப்துல் கபூர், மு.நா., எண்.101, 105.

95. **குர்ஆன்** 30 : 41; 103 : 1 - 2.

96. கா. மார்க்ஸ், பி. எங்கெல்ஸ், **கம்யூனிஸ்டு கட்சி அறிக்கை,** பக். 43 - 56.

97. மேலது.

98. உணர்வு அல்லது கருத்துக்கள்தான் முதலில் தோன்றின; இயற்கை, உலகம் என்னும் பருப்பொருள் அதன் விளைவுதான் என்று ஒரு சாரார் நம்புகின்றனர். அவர்களின் நம்பிக்கை கருத்து முதல்வாதம் எனப்படும். அத்தகைய நம்பிக்கையைக் கொண்டிருப்போர் கருத்து முதல்வாதிகள் எனப்படுவர்.

இதற்கு மாறாக இயற்கை, உலகம் என்னும் பருப்பொருள்தான் முதலில் தோன்றியது என்றும் இந்தப் பருப்பொருள்தான் உணர்வுகள் அல்லது கருத்துக்களைத் தோற்று க்கின்றன என்றும் பிறிதொருசாரார் நம்புகின்றனர். அவர்களின் நம்பிக்கை பொருள்முதல்வாதம் எனப்படும். அத்தகைய நம்பிக்கையைக் கொண்டிருப்போர் பொருள்முதல்வாதிகள் எனப்படுவர்.

வி. கிரபிவி ன், (மொ.பெ.), இயக்கவியல் பொருள்முதல்வாதம் என்றால் என்ன?, பக்.23 - 24.

(மார்க்சியம், பொருள்முதல்வாதத்தின் அடிப்படையில் சமுதாயத்தை ஆய்வு செய்கிறது. சமயங்கள், கருத்து முதல்வாதத்தின் அடிப்படையில் சமுதாயத்தை ஆய்வு செய்கின்றன. இங்குதான் சமயங்களும் மார்க்சியமும் கொள்கை அள வில் மாறுபடுகின்றன.)

99. ப. ஜீவானந்தம், **சோஷலிஸ்ட் தத்துவங்கள்,** பக்.24 - 31.

100. இயக்கவியல் பொருள்முதல்வாத விதிகளைப் பயன்படுத்தி மானுடத்தின் வரலாற்றை ஆய்வு செய்யும்போது வரலாறு பற்றிய ஒரு புதிய கண்ணோட்டம் கிடைக்கிறது. அதனையே மார்க்சியச் சிந்தனையாளர் வரலாற்றுப் பொருள்முதல்வாதம் என்பர்.

ஆளுவோரின் கருத்துக்கள் வரலாற்றை இயக்குவதில்லை; மனிதர்களின் சமூகச் செயல்களால்தான் வரலாறு வளர்கிறது என்பதுதான் வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தின் அடிப்படையாகும்.

மேலது, பக்.32 - 33.

101. நா. வானமாமலை, **மார்க்ஸீய சமூக இயல்கொள்கை**, பக்.16 - 80.

102. S.A.P. வற்கீஸ், ஏகாதிபத்தியத்தின் அடிப்படை இயல்புகள் , **சிறுமலர்** (ஜூன் + ஜூலை, 1992), ப.3.

103. சமுதாயத்தின் வாழ்வுக்கு வேண்டிய பொருட்களின் உற்பத்தியையும் அதன் விநியோகத்தையும் ஆராயும் அறிவியலே அரசியல் பொருளாதாரம் ஆகும்.

எஸ். இல்யீன், அ. மொத்திலோவ், (மொ.பெ.), **அரசியல் பொருளாதாரம் என்றால் என்ன**?, பக். 9 - 10.

104. எஃப். வோல்கவ், தி. வோல்கவா, (மொ.பெ.), **உபரிமதிப்பு என்றால் என்ன ?,** பக். 62 - 67.

105. மாந்தர்தம் நிறைவாழ்வுக்கான வழிமுறைகளை மார்க்சியம் அறிவியல் முறையில் வி ளக்குவதால் மார்க்சியச் சிந்தனையாளர் அதனை விஞ்ஞான சோசலிசம் என்பர். அறிவியல் முறையில் விளக்கம்பெறாத சமத்துவச் சிந்தனைகளை அவர்கள் கற்பனைவாத சோசலிசம் என்பர்.

பா. ஜீவானந்தம், மு.நூ., பக். 9 - 23.

106. இருவேறுபட்ட வர்க்கங்களுக்கு இடையே உள்ள முரண்பாடுகள் ஒரு குறிப்பிட்ட கட்டத்தை எட்டும்போது அவை போராட்டங்களாக வெடிக்கின்றன. அவையே வர்க்கப் போராட்டங்கள் எனப்படும்.

மேலது, ப. 54.

107. அ) டி. கிளிமேன்தியெவ், தி. வசீலியெவா, (மொ.பெ.), **சோஷலிசம் என்றால் என்ன?** பக். 43 - 113.

ஆ) பா. ஜீவானந்தம், மு.நூ., பக். 54 - 59.

108. கா. மார்க்ஸ், பி. எங்கெல்ஸ், மு.நூ., பக். 77 - 79.

109. பா. ஜீவானந்தம், மு.நூ., பக். 66 - 68.

110. அ) எல். செலிஸ்னியோவ், வி . ஃபிதீசவ், (மொ.பெ.), **வி ஞ்ஞான கம்யூனிசம் என்றால என்ன**? பக். 120 - 140.

ஆ) பா. ஜீவானந்தம், பக். 68 - 69.

111. அ) நான் ராமராஜ்யம் என்ற சொல்லைப் பயன்படுத்துவதை என்னுடைய முஸ்லிம் நண்பர்கள் தவறுதலாகப் புரிந்துகொள்ள வேண்டாம் என எச்சரிக்கிறேன். ராமராஜ்யம் என்பதன் மூலம் இந்து ராஜ்யத்தை நான் குறிப்பிடவில்லை. ராமராஜ்யம் என்பதன் மூலம் தெய்வ ராஜ்யத்தை, ஆண்டவனின் ராஜ்யத்தையே நான் குறிப்பிடுகிறேன். என்னைப் பொறுத்தவரை ராமரும் ரஹீமும் இருவேறு தனித்தனிக் கடவுள்களல்ல; ஒரே கடவுள்தான்.

**மகாத்மா காந்தி நூல்கள்,** தொகுதி 15, பக். 346 - 347.

ஆ) இந்திய சுயராஜ்யமானது, பெரும்பான்மை வகுப்பினராகிய இந்துக்களின் ஆட்சியாக இருக்கும் என்று கூறப்படுகிறது. இதைக்காட்டிலும் பெரிய தவறு எதுவும் இருக்க முடியாது. இது உண்மையானால் நான் அதை சுயராஜ்யம் என்று அழைக்க மாட்டேன்; என்னுடைய பலம் உள்ள அளவுக்கு அதை எதிர்த்துப் போராடுவேன். என்னைப் பொறுத்தவரை இந்திய சுயராஜ்யம் என்பது மக்களுடைய ஆட்சியாகும். அதாவது நீதியின் ஆட்சியாகும்.

மேலது, ப. 27.

112. மேலது, பக். 72 - 73, 87.

113. மேலது, ப. 341.

114. மேலது, ப. 65.

115. மேலது, தொகுதி 7, பக். 31 - 36.

116. **மகாத்மா காந்தியின் போதனைகள்,** பக். 101 - 103.

வேலையின்றி கொடும் பசியால் வாழும் ஜனங்களிடம் வேலை, உணவாகிய ஊதியம் என்ற உருவில் வரும் கடவுளே ஏற்றுக்கொள்ளப்படுவர். வேறு உருவில் வருவதற்குக் கடவுள் கூடத் துணியமாட்டார்.

மேலது, ப. 101.

117. மேலது, பக். 83 - 87.

ஒரே தண்டைக்கொண்ட மரத்தில் பல கிளைகளும் இலைகளும் இருப்பதுபோலவே, சத்தியமான பூரணமான மதம் ஒன்றுதான் என்றாலும் மனிதர்களின் வாயிலாக

வெளிவரும்போது அது பலவாகி விடுகிறது.

மேலது, ப. 85.

118. மேலது, பக். 87 - 88.

119. மேலது, ப. 89.

120. **மகாத்மா காந்தி நூல்கள்,** தொகுதி 15, ப. 96.

121. **மகாத்மா காந்தியின் போதனைகள்,** பக். 181 - 185.

122. **மகாத்மா காந்தி நூல்கள்,** தொகுதி 15, ப. 35.

123. மேலது, பக். 25 - 30, 57 - 58, 113, 363.

124. மேலது, பக். 63 - 64, 114.

125. மேலது, பக். 25 - 31, 64.

126. மேலது, பக். 25, 44, 103, 333 - 334, 339.

127. மேலது, பக். 31 - 42, 52 - 55, 63 - 64, 83 - 89, 114 - 133.

128. **பாரதிதாசன் கவி தைகள்,** தொகுதி 1, 'முன்னேறு' , அடி. 1 - 6.

(பாரதிதாசன் சுயமரியாதை இயக்கத்தின் கொள்கைகளுக்குக் க விதை வடிவம் கொடுத்தவர் என்பதனால் அவரது க விதைகள் இங்கு மேற்கோள் காட்டப்படுகின்றன.)

129. அ) **பெரியார் களஞ்சியம்,** தொகுதி 3, ப. 29.

ஆ) மேலது, தொகுதி 1, ப. 108.

130. மேலது, பக். 86 - 90.

131. பாரதிதாசன், மு.நூ., புதிய உலகு செய்வோம் , அடி. 1 - 2.

132. **பெரியார் களஞ்சியம்**, தொகுதி 1, ப : 150; 2, பக். 99, 175; 3, ப. 31; 4, ப. 41.

133. மேலது, தொகுதி 3, ப : 173, 264; 4, ப. 3.

134. மேலது, தொகுதி 1, பக் : 14 - 15.

135. மேலது, பக். 11 - 13.

136. அ) மேலது, பக். 214 - 215.

ஆ) பெரியார் உண்மையான சமயத்தை எதிர்க்க வில்லை; சமுதாய அநீதிகளை நியாயப்படுத்தும் போலி சமயத்தையே எதிர்த்துள்ளார் என்று அண்மையில் நடந்த இறையியல் ஆய்வுகளும் சுட்டிக்காட்டுகின்றன.

ஜெரி, **மனிதம்**, பக். 235 - 239.

137. **பெரியார் களஞ்சியம்**, தொகுதி 3, ப. 180.

138. **பாரதிதாசன் க விதைகள்,** தொகுதி 4, 'ஒற்றுமைப்பாட்டு' , அடி. 7 - 8.

139. **பெரியார் களஞ்சியம்**, தொகுதி 5, பக். 1 - 2 .

140. மேலது, பக். 3, 23, 171, 204, 272.

141. மேலது, பக். 15, 288 - 290; தொகுதி 6, பக். 59, 99 - 112, 200 - 213.

142. மேலது, தொகுதி 5, பக். 41 - 45.

143. மேலது, தொகுதி 2, பக். 34, 99 - 100.

144. மேலது, தொகுதி 1, பக். 86 - 90; 123 - 124; 2, பக். 148, 230 - 231; 3, பக். 150 - 151; 6, பக். 59 - 111.

o